## நுழைவாயிலில்... - வ.ந.கிரிதரன் -

அண்மையில் நண்பரும் எழுத்தாளருமான டானியல் ஜீவா அவர்கள் 'ஏன் நீங்கள் உங்கள் பால்ய பருவத்து அனுபவங்களை நூலாக்கக் கூடாது? நீங்கள் எழுதும் வவுனியா அனுபவங்களையெல்லாம் விரும்பி வாசிப்பவன் நான்' என்றார். அப்பொழுதுதான் நானும் அது பற்றி யோசித்தேன். நான் முகநூலில், பதிவுகள் இணைய இதழில், என் வலைப்பதிவில் எல்லாம் என் பால்ய, பதின்ம வயது அனுபவங்களை எழுதுவது வழக்கம். என் பால்ய பதின்ம வயதுத்திரைப்பட அனுபவங்களை, வாசிப்பு அனுபவங்களையெல்லாம் நிறைய எழுதியிருக்கின்றேன்.

மீண்டும் அவற்றை நோக்கியபோது ஒரு நூலாக்கும் அளவுக்கு எழுதியிருந்ததை உணர முடிந்தது. அவை அனைத்தையும் தொகுத்து நூலாக்கினால் நல்லதோர் ஆவணமாக அதுவிருக்கும் என எனக்கும் தோன்றியது. அதன் விளைவே இந்த மின்னூல். மேலும் பல தொகுப்புகள் வருவதற்கான சாத்தியங்கள் உள்ளன.

சில பதிவுகள் , ஒன்றுக்கு மேற்பட்டவை, ஒரே விடயத்தைக் கூறுபவையாகவும் இருந்தாலும் அவற்றை நான் நீக்கவில்லை. எழுதப்பட்ட பதிவுகள் என்னும் அடிப்படையில் அவை அனைத்தையும் தொகுப்பில் உள்ளடக்கியுள்ளேன். அழியாத கோலங்கள் என்னும் தலைப்பில் வரும் இரண்டாவது தொகுப்பிது. ஏற்கனவே முதலாவது தொகுப்பு வெளியாகியுள்ளது.

இவை அழியாத கோலங்கள் மட்டும்மல்ல. ஒரு குறிப்பிட்ட காலத்து வரலாற்றை வெளிப்படுத்தும் ஆவணங்களும் கூட. இவ்விதமானதோர் ஆலோசனையினைத் தந்ததற்காக நண்பர் டானியல் ஜீவாவுக்கு நன்றி.

# உள்ளே

## 1. அப்பா நினைவாக..

இன்று நவம்பர் 30, அப்பாவின் (நடராசா நவரத்தினம்) நினைவு நாள். என் ஆளுமையினை உருவாக்கிய சிற்பி. அவரது ஊக்குவிப்புகள், சிந்தனைகள்தாம் என்னை எழுத்தாளனாக உருவாக்கின. எனது ஆளுமையின் கூறுகளின் பின்னாலும் அவர் மறைந்திருக்கின்றார்.

எம் பால்ய பருவத்தில் அவர் தமிழக வெகுசன சஞ்சிகைகள், நூல்கள் ,பத்திரிகைகள் என வாங்கிக் குவித்தார். அவற்றின் விளைவுகளே என் வாசிப்பும், எழுத்தும்.

வானியற்பியலின் மீதான நாட்டமும் அவருடன் இரவுகளில் குருமண்காட்டு வீட்டு முன்றிலில் இரவு வானை அவதானித்ததால் ஏற்பட்ட விளைவுதான்.

அதிகாலைகளில் காக்கைதீவுவரை நடந்து, வில்லூன்றிக் கேணி சென்று குளித்த நாட்கள் இன்னும் பசுமையாக நினைவிலுள்ளன. வவுனியா பட்டாணிச்சுப் புளியங்கள் குளத்தில் குளித்த நாட்கள் தெரிகின்றன. தமிழக அரசியல், இலக்கியம் என்று பல்வேறு விடயங்கள் பற்றி உரையாடிய பொழுதுகள் நினைவில் சிறகடிக்கின்றன.

அவரை நினைத்தால் நினைவுக்கு வரும் இன்னுமொரு விடயம். அவர் பாவிக்கும் சுருட்டு வகைகள். கனகலிங்கம் சுருட்டு, வையன்னா சீனா சுருட்டு. இவ்விரண்டு வகைகளையும் விரும்பிப் பாவிப்பார்.

அவர் வைத்திருந்த ஆங்கில நூல்கள் அடங்கிய 'புக்செல்ஃப்' , அதிலிருந்து அவருக்குப் பிடித்த எழுத்தாளர்களான கிறகாம் கிறீனின் நாவல்கள், ஆர்.கே.நாராயணின் நாவல்கள்,பி.ஜி.வூட் ஹவுஸின் நூல்கள், டி.எச். லாரண்ஸின் லோரன்ஸ் ஒஃப் அரேபியா', டால்ஸ்டாயின் 'அன்னா கரீனினா'.. இவையெல்லாம் நினைவுக்கு வருகின்றன.

இவர் விரும்பி வாசித்த ஆங்கிலப் பத்திரிகைகள் - இன்டியன் எக்ஸ்பிரஸ், தி ஹிந்து. வாங்கிய தமிழ்ப் பத்திரிகை சஞ்சிகள் - தினமணி, சுதந்திரன், ஈழநாடு வாரமலர், கல்கி, ஆனந்த விகடன், கலைமகள், மஞ்சரி, தினமணிக்கதிர், குமுதம், பொன்மலர் காமிக்ஸ், பால்கள் காமிக்ஸ், ராணி , ராணி முத்து, கலைக்கதிர். இவை எம் பால்ய பருவத்து வாசிப்புக்குத் தீனி போட்ட தொடர்கதைகளை, எழுத்துகளைத் தாங்கி வந்த வெகுசன இதழ்கள். இவ்விதழ்களில் வெளியான தொடர்கதைகளை , தொடர்கள் முடிந்ததும் நூல்களாகக் கட்டி வைப்போம்.

குருமண் காட்டில் வசித்த காலத்தில் ஒரு முறை தோன்றிய வால்வெள்ளி பார்ப்பதற்காக அதிகாலையே எம்மைத் தூக்கத்திலிருந்து எழுப்பிக் காட்டினார். புலியூர்க்கேசிகனின் சிலப்பதிகாரம், மணிமேகலை, நற்றிணை, பாரதியார் கவிதைகள், ராஜாஜியின் சக்கரவர்த்தித்திருமகன், வியாசர் விருந்து ஆகிய

நூல்களை அப்பருவத்திலேயே எமக்கு வாங்கி அறிமுகம் செய்தார். அவ்விதம் வாங்கிய இன்னுமொரு மலர் அண்ணா முதலமைச்சராகவிருந்தபோது நடந்த உலகத் தமிழாராய்ச்சி மாநாட்டு மலர்.

சிரித்த முகமும், உயர்ந்த தோற்றமும் மிக்க ஆகிருதி. அம்மாவும், இவரும் ஜெயகாந்தனின் ஆடும் நாற்காலிகள் ஆடுகின்றன, கோகிலா என்ன செய்து விட்டாள் போன்ற ஜெயகாந்தனின் குறுநாவல்கள் பற்றி உரையாடியது நினைவுக்கு வருகின்றது. மிஸ்ஸியம்மா திரைப்படத்தில் வரும் 'பிருந்தாவனத்தில் நந்தகுமாரன்' பாடலைப் பாடியது நினைவுக்கு வருகின்றது.

அப்பா கலைஞரின் கட்சி., நான் எம்ஜிஆரின் தீவிர இரசிகன்., எம்ஜிஆர், கலைஞர் பிரிந்தபோது நாமிருவரும் பிரிந்து நின்று தர்க்கிப்போம்., நினைவுக்கு வருகின்றது. அப்பா ஒரு கிரிக்கெட் ஆர்வலர். டிரான்ஸிஸ்டர் ரேடியோவில் எழுபதுகளில் சென்னையில் நடந்த கிரிக்கெட் போட்டிகளின் நேர்முக வர்ணனைகளைக் கேட்பார். அவருடன் கூடவிருந்து நானும் கேட்பேன். அப்போது எனக்கு அறிமுகமானவர்கள்தாம் நவாப் பட்டௌடி, குண்டப்பா விசுவநாத், சுனில் கவாஸ்கர், சாப்பல் சகோதரர்கள் எல்லாரும்.

அப்பாவுக்கு மிகவும் பிடித்த ஹாலிவூட் நடிகர்கள்: அந்தனி குயீன், சாள்டன் ஹெஸ்டன், ஹர் கூப்பர், சீன கானரி. அதிகாலைகளில் இலங்கை வானொலியின் தமிழ்ச்சேவையில் ஒலிக்கும் பழையபாடல்களை விரும்பிக் கேட்பார். பி.யூ.சின்னப்பா, தியாகராஜ பாகவதர் பாடல்களை விரும்பிக் கேட்பார்.

என் எழுத்தில், என் நினைப்பில், என் வாழ்வின் ஒவ்வொரு கணமும் என்னுடன் பயணிக்கும் ஆளுமை என் அப்பா.

## 2. இந்துமதியின் 'தரையில் இறங்கும் விமானங்கள்'

எழுத்தாளர் இந்துமதி எனக்கு அறிமுகமானது என் பால்ய பருவத்து வாசிப்பின்போது. ஆனந்த விகடனில் எழுத்தாளர் சிவசங்கரி அறிமுகமானது அவரது 'எதற்காக?" என்னும் சிறு நாவல் மூலம். ஓவியர் ஜெயராஜின் ஓவியங்களுடன் , இளந் தம்பதியின் காதல் மிகுந்த உரையாடல்களுடன் நடைபோட்ட நாவலின் முடிவு எதிர்பாராதது. நாயகி குளியலறையில் குளிக்கும்போது மின்சாரம் தாக்கி இறந்து போகின்றார். இதெல்லாம் எதற்காக என்று நாவல் முடிந்திருக்கும். இவைதாம் என் நினைவில் அந்நாவல் பற்றி நிற்கும் நினைவுகள்.

சிவசங்கரியின் வரவுடன் அவரைப்போன்ற எழுத்து நடையுடன் வந்தவராகவே எனக்கு இந்துமதி நினைவிலுள்ளார். அவரது 'கீதமடி நீ எனக்கு' நாவல்தான் விகடனில் தொடராக வெளியான முதல் நாவல். ஓவியர் மாயாவின் ஓவியங்களுடன் வெளிவந்திருக்க வேண்டும். அதிலும் சிவசங்கரியின் நாவலில் வரும் நாயக,நாயகியர்போல் காதலை வெளிப்படுத்தும் பாத்திரங்கள் இருந்ததாக நினைவு. கதை மறந்து விட்டது. அதனைத் தொடர்ந்து மேலுமிரு நாவல்கள் விகடனில் தொடராக வெளிவந்தன. ஒன்று 'மலர்களில் அவள் மல்லிகை' (ஓவியர் மாயாவின் ஓவியங்களுடன் வெளியானதாக நினைவு). அடுத்தது ஓவியர் ஜெயராஜின் ஓவியங்களுடன் வெளியான 'தரையில் இறங்கும் விமானங்கள்'.

'தரையில் இறங்கும் விமானங்கள்' அக்காலகட்டத்தில் எம்மை மிகவும் கவர்ந்த நாவல். நாயகன் விஸ்வம், அவனது அண்ணன் பரசு, அண்ணி ருக்மிணி இவர்கள் மறக்க முடியாத பாத்திரங்கள். இந்நாவலில் எழுத்தாளர் நா.பார்த்தசாரதி, தி.ஜானகிராமன் ஆகியோரின் பாதிப்பு இருந்ததாக உணர்கின்றேன். குறிப்பாக விஸ்வம் தன் அண்ணி ருக்மிணியின் பாதங்களைப்பற்றி நினைப்பதை ஆசிரியர் விபரிக்கும்போது நா.பா.வின் 'பொன்விலங்'கில் நாயகன் சத்தியமூர்த்தியின் பாதங்களைப்பற்றி விபரிப்பது நினைவுக்கு வந்தது. நாவலில் வரும் பெண்களைப்பற்றிய விபரிப்பு தி.ஜா.வின் பெண்களை நினைவுக்குக் கொண்டு வந்தது. . இந்துமதியின் நாவல்களிலேயே மிகவும் முக்கியமான நாவலாக நினைவு கூரப்படும் நாவல் இதுவாகவே இருக்குமென்பது என் கணிப்பு

இந்த நாவலைப்பற்றி நினைத்ததும் நினைவுக்கு வரும் இன்னுமொரு விடயம். என் ஒன்றுவிட்ட தங்கையொருத்திக்கும் எனக்கும் சில மாதங்களே வயது வித்தியாசம். அவளும் என்னைப்போல் தீவிர வாசகி. ஆனால் அவளது வாசிப்பு வெகுசன இதழ்களில் வெளியாகும் நாவல்களுடன் நின்றுவிடும். இந்துமதியின் 'தரையில் இறங்கும் விமானங்கள்' தொடராக வெளியானபோது நாங்கள் விரும்பி வாசித்தோம். முடிந்ததும் நாவலை அழகாக 'பைண்டு' செய்து வைத்திருந்தாள். அவள் அவ்விதம் 'பைண்டு' செய்து வைத்திருந்த ஒரேயொரு நாவல் அதுதான். அவள் எழுபதுகளின் நடுப்பகுதியில் கனடா சென்றுவிட்டாள்.

அவள் செல்கையில் அந்த நாவலை என்னிடம் கொடுக்கும்படி பல தடவை கேட்டும் கொடுக்காமல் எடுத்துச் சென்றுவிட்டாள். அந்தப்பருவத்தில் எனக்கும் அந்த நாவல் மிகவும் பிடித்திருந்தது.

அந்த நாவல் ஏன் எனக்குப் பிடித்திருந்தது என்று எண்ணிப்பார்க்கின்றேன். நாவலில் ஆங்காங்கே தூவப்பட்டிருக்கும் இயற்கை பற்றிய வர்ணனைகள், நட்சத்திரங்கள், அணில்கள் இவை எனக்குப் பிடித்திருந்தன. நடுத்தர வர்க்கத்துப் பிரதிநிதிகளில் ஒருவனான எனக்கும் அதே வர்க்கத்தைச் சேர்ந்த நாவலின் நாயகன் பரசுவை உணர்ந்துகொள்வதில், புரிந்துகொள்வதில் சிரமம் இருக்கவில்லை. வாழ்க்கைச் சுழல் அவனை வண்டில் மாடாகி விடுகின்றது. அந்தக்கட்டிப்போடலுக்குமிடையிலும் அவன் தனக்குப் பிடித்தவற்றைச் செய்கின்றான். வாசிக்கின்றான். சஞ்சிகை நடத்துகின்றான். காதலிக்கின்றான். இருப்பை இன்பமாக வாழும் வழியறிந்து வாழ்கின்றான்.

நாவலில் வரும் அண்ணி ருக்மிணி மறக்க முடியாத பாத்திரங்களில்  ஒன்று. அவள் இருப்புக்கு அர்த்தம் தருபவள். கணவன் பரசுவின் நல்ல குணத்தை அறிந்து, உணர்ந்து வைத்திருப்பவள். ஜானகிராமனின் 'செம்பருத்தி' நாவல் இவளைப்பற்றி நினைத்ததும் நினைவுக்கு வரும். செம்பருத்தியில் சட்டநாதனின் காதலி அவனுக்கு அண்ணியாகிவிடுவாள். அவள் ருக்மிணியைப்போன்றவளல்லள். ஆனால் 'தரையில் இறங்கும் விமானங்கள்' நாவலில் அண்ணியாக விசுவின் வாழ்வில் நுழையும் அண்ணி பாசம் மிகு தாயாக, உணர்வுகளைப் பகிர்ந்துகொள்ளும் சிநேகிதியாக மாறி விடுகின்றாள். இயந்திரமயமான வாழ்க்கையை இன்பமுற வாழும் வழியினை நன்கறிந்தவள். அவனையும் அதனை உணர்ந்து வாழும்படி மாற்றிவிடுபவள். நாவலின் இறுதியில் பரசு வாழ்க்கையை அப்படியே ஏற்று, அதில் இன்பமுற்று வாழ்வதற்குக் காரணமானவள் அவள்.

இவை தவிர அதற்குப் பின் இந்துமதி எழுதிய நாவல்களை நான் படித்ததில்லை. என் வாசிப்பும் அடுத்தக் கட்டத்துக்கு நகர்ந்து விட்டது. ஆனால் பால்ய, பதின்ம வயது வாசிப்பென்பது பெரும்பாலும், உணர்வுகளை இன்பத்திலாழ்த்தும் வெகுசனப் படைப்புகளாகத்தாமிருக்கும்.அவை ஒருவரின் வாசிப்புப் படிக்கட்டுகளில் முக்கியமான படிக்கட்டு என்பதை நம்புபவன் நான். அவ்வாசிப்பனுபவமும், படைப்புகளும் ஒருவரின் வாழ்க்கையில் தொடர்ந்தும் அழியாத கோலங்களாக இருந்து வருபவை. அவ்வகையில் இந்துமதியின் 'தரையில் இறங்கும் விமானங்கள்' நாவலும் என்னைப்பொறுத்தவரையில் அழியாத கோலங்களில் ஒன்றே.

## 3. யாழ் இந்துக்கல்லூரி நினைவுகள்: 'ஸ்கோடா'  தேவன் 'மாஸ்ட்டர்'

இவர் யாழ் இந்துக்கல்லூரியில் கற்பித்த ஆசிரியர் மட்டுமல்லர். இலங்கைத்தமிழ்க் கலை,இலக்கிய உலகில் நன்கறியப்பட்டவரும் கூட. ஆங்கிலத்திலும், தமிழிலும் மிகுந்த புலமைபெற்ற  இவர் சிறந்த பேச்சாளரும் கூட. யாழ்ப்பாணத்தில் நடைபெற்ற பல கலை, இலக்கிய நிகழ்வுகளை மேடையில் ஒருங்கிணைத்து வெற்றிகரமாக நடத்தியுள்ளார். இவரிடம் நான் ஒருபோதுமே கல்வி கற்றதில்லை. இருந்தாலும் இவர் மொழிபெயர்ப்பில் 'மணிபல்லவம்' என்னும் பெயரில்  வெளியான ரொபேர்ட் லூயிஸ் ஸ்டீவன்சனின் புகழ்பெற்ற சிறுவர் நாவலான 'தி ட்ரெசர் ஐலன்ண்ட்' நாவலின் தமிழ் மொழிபெயர்ப்பு என் பால்ய, பதின்ம பருவங்களில் எனக்கு மிகவும் பிடித்ததொரு நூலாக விளங்கியது.

இவரைப்பற்றி நினைத்ததும் முதலில் நினைவுக்கு  வருவது இவரது புகழ்பெற்ற ஸ்கோடா கார்தான். அதனால் இவர் ஸ்கோடா என்னும்  பட்டப்பெயராலும் அழைக்கப்பட்டார். யாழ் இந்துக்கல்லூரி பற்றிய என் நினைவுகளில் தவிர்க்க முடியாது இவர் இடம் பெறுவதற்கு முக்கிய காரணம் இவரது இலக்கியப்பங்களிப்பும், அந்த ஸ்கோடா காரும்தாம். இவரிடம் நான் படிக்காவிட்டாலும் இவர் பற்றிய இரு கட்டுரைகளை எழுதியுள்ளேன். எழுத்தாளர் முல்லை அமுதனின் 'இலக்கியப்பூக்கள் 2' தொகுப்புக்காக இவர் பற்றிய கட்டுரையொன்றும், யாழ் இந்து கனடாவின் கலையரசி மலருக்காக இன்னுமொரு கட்டுரையும் எழுதியுள்ளேன்.
இவரது இயற்பெயர் இளையப்பா மகாதேவா.

எம் ஆசிரியர்கள் எல்லோரும் எங்களது பால்ய, பதின்ம பருவங்களுடன் பின்னிப் பிணைந்தவர்கள். அவ்வகையில் முக்கியமானவர்கள். அழியாத கோலங்களாக நிலைத்து நிற்பவர்கள்.

## 4 மறக்க முடியாத யாழ் இந்துக்கல்லூரி விறாந்தை!

மறக்க முடியாத விறந்தை! யாழ் இந்துக்கல்லூரியில் எட்டாம் வகுப்பிலிருந்து க.பொ.த(உயர்தரம்) படித்த காலத்தில் இந்த விறந்தையிலுள்ள வகுப்பறைகளில் பல வகுப்புகள் நடந்திருக்கின்றன. மறக்க முடியாத பல நினைவுகளைப் பதுக்கி வைத்துள்ள வகுப்புகள். வீதிப்பக்கம் ஜன்னல்கள். விறந்தையின் வடக்குப் பக்கம் நீண்ட முற்றம். அந்த முற்றத்தில் அவ்வப்போது நிகழ்வுகள் நடந்திருக்கின்றன. கம்பவாரிதி ஜெயராஜ் மாணவனாக இருந்தபோது ஓரிரு நாட்கள் நடந்த கம்பன் விழா, மலேசியத் திருவாசகமணி கலந்து கொண்ட திருவாசக விழா இவையெல்லாம் இம்முற்றத்தில்தான் நடந்தன.

இந்த வகுப்பறைகள் நினைவூட்டும் வாத்தியார்கள்: மகேந்திரன் மாஸ்டர், மகேஸ்வரன் மாஸ்டர், புண்ணியலிங்கம் மாஸ்டர், சோமசேகரசுந்தரம் மாஸ்ட்டர், கணேசலிங்கம் மாஸ்டர், மரியதாஸ் மாஸடர், சுந்தரதாஸ் மாஸ்டர், சிவராஜா மாஸ்டர், சந்தியாப்பிள்ளை மாஸ்டர்....

புண்ணியலிங்கம் 'மாஸ்டர்' இந்த விறாந்தை வழியாகத்தான் ஒருமுறை 'டைனமோ' எவ்விதம் வேலை செய்கிறதென்று காட்டுவதற்குத் தனது சைக்கிளை வகுப்பறைக்குக் கொண்டுவந்து 'டைனமோ' எவ்விதம் வேலை செய்கிறது என்பதைச் செய்து காட்டினார். ஒன்பதாம் வகுப்பிலென்று நினைவு. அப்பொழுது நான் அதிபர்கள் கண்டு பிடிக்கும்வரை நீண்ட தலைமயிர் வளர்ப்பேன். எனக்கும் அதிபர்களுக்குமிடையில் இவ்விடயத்தில் கண்ணாமூச்சி விளையாட்டு நடைபெறுவதுண்டு. பி.எஸ்.குமாரசாமி அதிபராக வந்த புதிதில் இந்த விறாந்தையில் வைத்துத்தான் நீண்ட தலைமுடியுடனிருந்த என்னைக் கண்டு , சிரித்தபடியே தலைமயிரை வெட்டி வரவேண்டுமென்று கூறியது நினைவிலுண்டு.

இங்குள்ள வகுப்பறையொன்றில் ஒன்பதாம் வகுப்பில் சந்தியாப்பிள்ளை மாஸ்டர் எங்களுக்குத் தமிழ் வாத்தியாராக வந்திருந்தார் ஒரு நாள் ஜன்னலுக்கப்பாலிருந்த வீதி வழியாகப் பிரேத ஊர்வலமொன்று சென்றுகொண்டிருந்தது. மாஸ்டர் உடனே எங்களையெல்லாம் பிரேத ஊர்வலம் சென்று முடியும் மட்டும் எழுந்து நின்று மரியாதைச் செய்ய வைத்தார். அந்நிகழ்வு மறக்க முடியாத நிகழ்வு. சந்தியாப்பிள்ளை மாஸ்டரை நினைத்தால் எப்போதும் நினைவுக்கு வரும் நிகழ்வு.

இவை போன்று எத்தனை நினைவுகளைத் தன்னகத்தே பதுக்கி வைத்துள்ளது இந்த விறாந்தை.

## 5. அதிபர் கார்த்திகேசன் மாஸ்டர்!

யாழ் இந்துக்கல்லூரி அதிபர்களில் இலங்கைச் சமூக, அரசியல் மற்றும் கலை, இலக்கியத் தளங்களில் நன்கு அறியப்பட்டவர் இவர். மார்க்சியச் சிந்தனையின் வளர்ச்சிக்குப் பின்னால் நிற்பவர்களில் இவரும் முக்கியமானவர்களிலொருவர். நான் யாழ் இந்துக்கல்லூரியில் எட்டாம் வகுப்பில் இணைந்த காலகட்டத்தில் யாழ் இந்துக்கல்லூரியின் அதிபராக இவர் சிறிது காலம் கடமையாற்றினார். இவரிடம் நான் படித்ததில்லை. இவர் பாடசாலைக்கு அதிபராகப்பதவியேற்ற சில நாள்களே ஆகியிருந்த நிலையில் எதற்கோ , எங்கோ ஓடிக்கொண்டிருந்த என்னை இடை நிறுத்திச் சிறிது நேரம் உரையாடினார். அந்தச் சிறிது நேரத்துச் சந்திப்பை இன்னும் என் மனத்தின் ஆழத்தில் பத்திரமாக வைத்துள்ளேன். எப்பொழுதும் இதழ்க்கோடியில் கசிந்துகொண்டிருந்த அந்தப்புன்னகை இன்னுமென் நெஞ்சில் பசுமையாகப்படிந்துபோயுள்ளது.

யாழ் இந்துக்கல்லூரியில் குறுகிய காலம் அதிபராகவிருந்த இவர்தான் தனது சமூக, அரசியற் செயற்பாடுகளால் பல்துறைகளிலும் நன்கு அறியப்பட்டவராக விளங்கினார்; விளங்குகின்றார். அவ்வகையில் யாழ் இந்துக் கல்லூரியின் புகழ்பெற்ற அதிபர்களிலொருவராக இவர் விளங்குகின்றார். அப்பொழுது இவர் யாழ் இந்துக்கல்லூரியின் அதிபர் என்பதைத்தவிர இவரைப்பற்றிய வேறெந்த விடயத்தையும் நான் அறிந்திருக்கவில்லை. பின்னரே கலை, இலக்கிய மற்றும் அரசியற் பிரமுகர்கள் மூலம் இவரைப்பற்றி நன்கு அறிந்துகொண்டேன். இன்றும் இவரைப்பற்றி இவரது மாணவர்களிலொருவர் அல்லது வழி நடத்தப்பட்ட எழுத்தாளர்களிலொருவர் எங்கோ ஒரு மூலையிலிருந்து எழுதிக்கொண்டுதானிருக்கின்றார்.

இவர்தான் யாழ் இந்துக்கல்லூரியின் முன்னாள் அதிபர் கார்த்திகேசன் மாஸ்டர் ஆவார்.

## 6. நண்பர் லிங்கேஷ் பகிர்ந்த காணொளி கண்டு சிறகடிக்கும் யாழ் இந்து நினைவுகள்...

நண்பர் லிங்கேஸ் (Linges Lingeswaran ) தற்போது யாழ்ப்பாணத்துக்குப் பயணித்திருக்கின்றார். அவர் யாழ் இந்துக்கல்லூரியையொட்டி ஒரு காணொளியினைத் தனது முகநூற் பக்கத்தில் பதிவிட்டிருந்தார். நண்பர் லிங்கேசுடனான அறிமுகம் எனக்கு ஏற்பட்டது எனது மச்சான், அம்மாவின் அண்ணரின் மகன், 'குட்டி' (செல்வகுமார் அல்லது ஜோர்ஜ்) மூலம். குட்டிக்கு நண்பர்கள் பட்டாளமொன்றிருந்தது.அவனைச்சுற்றி எப்பொழுதும் நண்பர்கள் சூழந்திருப்பார்கள். அவர்களிலொருவனாக வந்து என் நண்பனாகவும் மாறியவர்தான் லிங்கேஷ். சுருட்டைத்தலையும், எந்நேரமும் சிரிப்புமாகவும் காணப்படும் பேர்வழி. பதின்ம வயதுகளில் யாழ் நகர் தெருக்களில் நாங்கள் சைக்கிள்களில் அலைந்து திரியாத நாட்களில்லை.

லிங்கேஷ் பகிர்ந்திருந்த காணொளியில் அவதானித்தவை: யாழ் இந்துக்கல்லூரி மைதானத்தைச் சுற்றி வேலியிட்டிருக்கின்றார்கள். மாணவர்கள் துடுப்பெடுத்தாட்டம் ஆடிக்கொண்டிருக்கின்றார்கள். பதின்ம வயதுகளில் அங்கு திரிந்த காலகட்டக் காட்சிகளில் மனது நனவிடை தோய்கிறது.

அங்கு நடைபெற்ற துடுப்பெடுத்தாட்ட நிகழ்வுகள் பல இன்னும் மனத்தில் வளையமிடுகின்றன.  இடையில் குழம்பி, பிட்ச்சை (Pitch) எரிக்கப்பட்டு, பழைய மாணவன் சீனி அடி வாங்கிய மத்திய கல்லூரியுடனான துடுப்பெடுத்தாட்ட நிகழ்வு நினைவுக்கு வருகின்றது.

சூரியின் (இவர் யுத்தக் காலத்தில் ஷெல்லடியில் மரணமடைந்ததாகக் கேள்விப்பட்டிருக்கின்றேன்) , குகனின் 'ஹிட்' அடிக்கும் பாங்கு, நரேனின் 'பட்சொட்' (உண்மையில் இதன் பெயர்  ஷொட்  புட்- Shot put. ஆனால் நாங்கள் அழைப்பது 'பட் ஷொட்' என்றுதான்) , 'ஜாவ்லின்' (Javelin)  எறிதல் , மற்றும் நீளம் பாய்தல் என்று நினைக்கின்றேன், இவற்றில் பல தசாப்தங்களுக்கு முன் அவரது தந்தை ஆற்றிய சாதனையை உடைத்த நாளின் நினைவுகள் நினைவுக்கு வருகின்றன. சில சமயங்களில் நாங்கள் குழுக்களாகத் துடுப்பெடுத்தாட்டம் ஆடியதுமுண்டு.

விமலதாசனின் உதைப்பந்தாட்டத் திறமையினை முதலில் அவதானித்து வியந்தது இந்த மைதானத்தில் நிகழ்ந்த ஆட்டமொன்றின்போதுதான். அவர் பந்தை 'டொட்ஜ்' பண்ணும் திறமையினை அப்போது கண்டு மகிழ்ந்தேன்.

அதனருகே செல்லும் வீதி பல நினைவுகளை ஏற்படுத்துகின்றது. இந்துக்கல்லூரி மதிலில் அப்போது கண்ணாடித்துண்டுகள் நிறைந்திருக்கும், விடுதியிலிருந்து மாணவர்கள் ஏறிக்குதித்துச் செல்வதைத்தடுப்பதற்காக. அப்படியிருந்தும் மாணவர்கள் மதிலேறிக்குதித்து படம் பார்க்கச் செல்வார்கள். நண்பர்

ஈஸ்வரமூர்த்தி (சிவா முருகுப்பிள்ளை) எவ்விதம் கண்ணாடித்துண்டுகளைத் தவிர்த்து ஏறிக்குதித்தார் என்பதைக் கூறக் கூடும்.

இந்த வீதியில்தான் துரையப்பா கொலை வழக்கின் ஏழாவது எதிரியான செல்வகுமார் எழுபதுகளின் ஆரம்பத்தில், ஹர்த்தால் ஒன்றின்போது, பூவரசுக்கிளையொன்றை ஒடித்து, அதன் மூலம் மாணவர்களைப் பாடசாலைக்குச் செல்ல விடாது வீட்டுக்குக் கலைத்துக்கொண்டிருந்தார் . அந்தக் காட்சி இன்னும் பசுமையாக நினைவிலுண்டு. அப்போது நான் ஒன்பதாம் வகுப்பு மாணவன். நானும் அவ்விதம் வீட்டுக்கு ஓடியது நினைவிலுண்டு.

## 7. நடிகர் தர்மேந்திராவை நினைவூட்டும் அநபாயன்!

என் பதின்ம வயதினில் யாழ் கோட்டையின் முன்பாக, அகழி மதிலின்மீது அப்போது என்னிடமிருந்த 'Box Camera' மூலம் எடுத்த புகைப்படம். அருகில் என் மச்சான் 'குட்டி' (செல்வகுமார்), நண்பன் அநபாயன், மச்சானின் நண்பன் முத்துக்குமார். இந்தப் புகைப்படத்தைப் பார்த்ததும் நினைவுக்குருவி சிறகடித்து அந்தக்காலகட்டத்துக்கே சென்று விட்டது.

என் பதின்ம வயதுக் காலகட்டத்தில் என் நண்பர்களில் முக்கியமானவர்களில் ஒருவர் அநபாயன்,. கொக்குவில் குளப்பிட்டிப் பகுதியைச் சேர்ந்தவர். கந்தப்பிள்ளை மாஸ்ட்டரின் மகன். அமைதியான, சிரித்த முகத்துடன் காணப்படுபவர். நகரெங்கும் அலைந்து திரிவோம். பதின்ம வயதுக்குரிய அலைச்சல் அது. இவரைப்பற்றி நினைத்தால் நினைவுக்கு வருவது.. எனக்கு எப்போதும் இவர் ஹிந்தி நடிகர் தர்மேந்திராவின் இளமைத்தோற்றத்தை நினைவூட்டினார். கட்டுமஸ்த்தான் உடல் வாகு இவருக்கும். அதற்கு முக்கிய காரணங்களில் ஒன்று இவர் செய்யும் உடற் பயிற்சி. நான் இவரைச் சந்திப்பதற்காகக் குளப்பிட்டி செல்லும் சமயங்களில் இவர் உரலில் மண் போட்டு இடித்துக்கொண்டிருப்பார். உடல் ஆரோக்கியத்துக்காக இவர் செய்யும் உடற் பயிற்சிகளில் அதுவுமொன்று,

இவர் பேராதனைப் பல்கலைக்கழகத்தில் கற்று, கொழும்பில் இரத்மலான இந்துக்கல்லூரியில் ஆசிரியராகவும் கடமையாற்றினார். அப்பொழுது அக்கல்லூரியிலேயே தங்கி இருப்பதற்கான வசதியினையும் நிர்வாகம் செய்து கொடுத்திருந்தது. அவ்வப்போது சென்று சந்திப்பதுண்டு. அப்பொழுதும் கல்லூரியின் மைதானத்தில் ஓடிப் பயற்சியெடுப்பார்.

இவரது உடல் உடற்பயிற்சி காரணமாக ,தசை நார்கள் இறுகி, வலிமையாகவிருந்தன. ஒரு தடவை இவரை நாயொன்று கடித்து விட்டது. அதற்காக இவரது வயிற்றில் ஊசி போடவேண்டும். இவருடன் நானும் கொழும்பு வைத்தியசாலைக்குச் சென்றிருந்தேன்., ஒரு பெண் தாதியொருவர் இவரது வலிமையான வயிற்றில் ஊசியைப் போட்டபோது ஊசி வளைந்து விட்டது. இவரைப்பற்றி நினைத்தால் எப்போதும் நினைவுக்கு வரும் விடயங்களில் இதுவுமொன்று.

## 8. இருப்பினை இன்பத்துடன் இறுதிவரை எதிர்கொண்ட "குட்டி' (அமரர் ஜோர்ஜ் செல்வகுமார் ராமநாதன்) நினைவாக.....

என் பால்ய காலத்திலிருந்து தொடர்ந்து வந்த பந்தமொன்று நேற்று முடிவுக்கு வந்தது. என் அம்மாவின் மூத்த அண்ணரான அமரர் வைத்தியர் ராமநாதன அவர்களின் ஒரே புதல்வன் என்பதால் எனக்கு மச்சான் முறையான இவருடனான எனது தொடர்பு உறவினருடனொருவருடனான தொடர்பு என்பதைவிட நண்பரொருவருடனான தொடர்பினை ஒத்தது. இவரது அம்மா கிறிஸ்தவ மதத்தைச்சேர்ந்தவர். எழுபதுகளில் யாழ் பொது வைத்தியசாலையில் 'மேட்ர'னாகக் பணியாற்றியவர். சகோதரி ஒருவருள்ள இவர் திருமணமானவர். பண்பும், அறிவும் மிக்க இரு குழந்தைகளுக்குத் தந்தையும் கூட.

அண்மைக்காலமாகவே நோய்வாய்ப்பட்டிருந்த இவரது இருப்பு நேற்று நண்பகல் முடிவுக்கு வந்தது. பல சந்தர்ப்பங்களில் இவர் இருப்புடன் போராடித்தப்பிப்பிழைத்தவர். சிறுவயதில் யாழ் புனித பரியோவான் கல்லூரியின் மாணவர் விடுதியின் கூரையொன்றில் மாங்காய் பறிப்பதற்காக முயன்ற வேளை , அதன் அண்மையிலிருந்த மின்சாரக்கம்பியால் தாக்கப்பட்டு, ஓரிரு நாள்கள் சுயநினைவற்ற நிலையிலிருந்து மீண்டு வந்தவர். பத்தாண்டுகளுக்கு முன்னர் இவரது இருதயம் இயங்க மறுத்தபோது, மாற்று இருதயம் டொராண்டோ பொது வைத்தியசாலையில் வைத்தியர்களால் பொருத்தப்பட்டு, கடந்த பத்தாண்டுகளுக்கும் மேலாக அந்த இக்கட்டிலிருந்து பிழைத்து வந்து வாழ்ந்து வந்தவர்.

அண்மைக்காலமாகவே மேலும் பல உடல் உபாதைகள் உருவாகி, இருப்பே கேள்விக்குறியானபோது கூட , இறுதிவரையில் இருப்பினைத்துணிச்சலுடன் எதிர்த்து நின்று வாழ்ந்து வந்தவர். அந்த மனப்பாங்கு என்னை மிகவும் பிரமிக்க வைத்ததுண்டு; கவர்ந்ததுண்டு. ஏற்கனவே முகநூலில் நான் பகிர்ந்துகொண்ட என் இளம்பருவத்துப் புகைப்படங்களில் இவருமிருக்கிறார். கீழுள்ள இடது பக்கத்திலுள்ள முதலாவது புகைப்படத்தில் கறுப்பு நிற 'டீ சேர்ட்டு'ன் இருப்பவர் இவரே.

இவரும் யாழ் இந்துக்கல்லூரி மாணவர்களிலொருவரே. குட்டி என்றால் அவரது காலகட்டத்து மாணவர்கள் பலருக்குத் தெரியும். ஜோர்ஜ் என்றும் சிலரால் அழைக்கப்பட்டார். அக்காலகட்டத்தில் எப்பொழுதும் இவரைச்சுற்றி நண்பர்கள் பட்டாளம் (பத்துப்பதினைந்து பேராவது) இருக்கும். நான் என் நண்பர்கள் வட்டத்துடன் திரிந்தாலும், அவ்வப்போது இவருடைய வட்டத்துடனுமிணைந்து ம் திரிவதுண்டு. இதனால் இவரது நண்பர்கள் பலர் எனக்கும் அறிமுகமானார்கள். அவர்களிலொருவர் என் முகநூல் நண்பர்களிலொருவரான லிங்கேஸ்வரன். முத்துக்குமாரன் (முத்தன்), கிருபா, யோககுமார், ரஞ்சிற், செல்லா என்று இவரது நண்பர்களில் சிலரின் ஞாபகம் இன்னும் நினைவிலுள்ளது.

நல்லூர்த் திருவிழா, யாழ் ஐந்து சந்தி பிளவ்ஸ் உணவகம், சுபாஸ் உணவகம், லிங்கம் கூல் பார், செல்லையா கபே என்றறியப்பட்ட சந்திரா கபே, திரைப்படங்கள் (குறிப்பாக றீகல் , மனோஹரா திரையரங்குகளில் பார்த்த ஆங்கிலத்திரைப்படங்கள்) என்று இவருடன் திரிந்ததெல்லாம் மீண்டும் மனத்திரையில் காட்சிகளாக விரிகின்றன. இவருக்கு ஆங்கிலத்திரைப்படங்கள் , குறிப்பாக சாகசங்கள் நிறைந்த 'ஜேம்ஸ் பாண்ட்' திரைப்படங்கள் மிகவும் பிடிக்கும்.

இவரது தந்தையாரிடம் ஆரம்பத்தில் ஊர்ந்து செல்லும் அந்தக்காலத்து , எட்டு சிலிண்டர்களைக்கொண்ட Wolseley காரொன்றும் (ஆமைக்கார் என்று நாம் வேடிக்கையாகக் கூறுவதுண்டு. வடிவத்திலும் பெரியதோர் ஆமையினை ஒத்திருந்த அக்கார் , ஊர்வதிலும் ஆமையையே ஒத்திருந்ததுதான் வேடிக்கை), பின்னர் சிங்கப்பூரிலிருந்து வாங்கி வந்த Peugeot காரொன்றும் இருந்தன. அவற்றில் நாம் அனைவரும் திரிந்த நினைவுகளும் கூடவே படம் விரிக்கின்றன. அக்காலகட்டத்தில் இவரிடம் கியருடன் கூடிய ரலி சைக்கிளொன்றுமிருந்தது. எந்நேரமும் நண்பர்களுடன் அந்தச்சைக்கிளில்தான் இவர் திரிவார். எண்பதுகளின் ஆரம்பத்தில் கிரேக்க நாட்டுக்குக் கப்பல் ஏறுவதற்காகச் சென்றவர், கப்பல் ஏறாமலேயே கனடாவுக்கு வந்து சேர்ந்தார். அது பற்றி வேடிக்கையாக 'கிறீஸுக்குச் சென்று கப்பல் ஏறாத ஒரே ஆள் நானாகத்தானிருக்க முடியும்" என்று கூறுவார்.

இவரைப்பற்றி நினைத்தால் எனக்கு நினைவில்வரும் இன்னுமொரு விடயம்: சிறுவர்களாக எங்களுக்கு யாழ் சுபாஸ் கபே புரூட் சாலட் மிகவும் பிடிக்கும். அதற்காக அங்கு செல்லும் நாம், வரும்போது சுபாஸ் கபேயில் மட்டன் ரோல்ஸும் வாங்கிவருவதுண்டு. அவ்விதம் வரும்போது எங்களுக்கிடையில் சில வேளைகளில் சண்டை மூள்வதுமுண்டு. அவ்விதம் சண்டை மூளும் சமயங்களில் இருவரும் பிரிந்து , இவர் கே.கே.எஸ் வீதி வழியாகவும், நான் கஸ்தூரியார் வீதி வழியாகவும் செல்வோம். பின்னர் நாவலர் வழியாகச்சென்று மீண்டும் நான் கே.கே.எஸ் வீதியில் இவருடன் இணைந்து கொள்வேன். அதற்குள் சண்டை முடிந்து சமாதானம் தொடங்கிவிடும்.

நான் கனடாவுக்கு வந்த புதிதில் ஆரம்பத்தில் இவர் தன் நண்பர்களுடனிருந்த தொடர் மாடிக்குடியிருப்பில்தான் சிறிது காலம் தங்கியிருந்தேன். எத்தனை உடல் உபாதைகளிருந்தாலும், இறுதிவரை இருப்பினை இன்பத்துடன் எதிர்நோக்கிய குட்டியின் நினைவுகள் தொடர்ந்தும் அவரை அறிந்தவர்கள் , நண்பர்கள் அனைவரின் நினைவுகளிலுமிருந்துவரும்.

## 9. யாழ் இந்துக் கல்லூரி நினைவுகள்: இருவர் - மரியதாஸ் மாஸ்ட்டர் & சுந்தரதாஸ் மாஸ்ட்டர்!

யாழ் இந்துக்கல்லூரி என்றால் என் நினைவில் வரும் ஆசிரியர்களிலொருவர் மரியதாஸ் மாஸ்ட்டர் அவர்கள். மறக்க முடியாதவர்களிலொருவர். பிரயோக கணித ஆசிரியராக எனக்கு அறிமுகமானவர். பாடத்தை நன்கு தயாரித்து, கற்பிப்பதில் வல்லவர். நான் டியூசன் எடுக்காத பாடமது.

அண்மையில் யாழ் இந்து மாணவர்களின் குழுப்புகைப்படமொன்றில் மிகவும் தெளிவான இவரது உருவத்தைக் கண்டேன். இவ்வுருவத்தில்தான் எனக்கு இவர் நினைவிலுள்ளார். அவரைப்பற்றிய நினைவுக்காக அதனை இங்கு பகிர்ந்துகொள்கின்றேன்.

அக்குழுப்புகைப்படத்தில் இருக்கும் இன்னுமோர் ஆசிரியர் சுந்தரதாஸ் மாஸ்ட்டர் அவர்கள். அவர் எங்களுக்கு ஒன்பதாம் வகுப்பில் ஆங்கிலம் படிப்பித்தார். முன்னாள் பொலிஸ் இன்ஸ்பெக்டராக இருந்தவர் என்றும், தன் பதவியைத்துறந்து ஆசிரியராக மாறியவரென்றும் அறிந்திருக்கின்றோம். நக்கலும் நளினமுமாகப் பேசுவதில் வல்லவர் இவர். மிகவும் கண்டிப்பானவராகவும் அறியப்பட்டிருந்தார். அண்மையில் கனடாவில் மறைந்துவிட்டார். யாழ் இந்துக்கல்லூரிக் கனடாச் சங்க நிகழ்வொன்றில் கண்டு கதைத்திருக்கின்றேன். உருவத்தில் தளராமலிருந்தார். ஆனால் அன்றிருந்த கண்டிப்பு மறைந்து மிகவும் கனிவாக உரையாடினார்.
இருவருக்குமுள்ள ஒற்றுமை இருவரது பெயர்களுமே 'தாஸ்' என்று முடிவடைவதுதான்.

## 10. ஜனவரி 10, 1974 உலகத் தமிழாராய்ச்சி நினைவுகள்.....

இலங்கைத்தமிழர்கள் மத்தியில் மறக்க முடியாத நாள்களிலொன்று. அன்றுதான் யாழ்ப்பாணத்தில் நடைபெற்ற உலகத்தமிழ் ஆராய்ச்சி மாநாட்டின் இறுதி தினம். யாழ் வீரசிங்கம் மண்டபத்தின் முன் இறுதி நாள் கூட்டத்தின்போது அமர்ந்திருந்த கூட்டத்தைப் பொலிசார் கண்ணீர்ப்புகைக்குண்டுகளை ஏவிக் கலைத்த தினம். அவர்கள் மின்சாரக் கம்பிகளைச் சுட்டு, அக்கம்பிகள் பட்டு, தப்பியோடிக்கொண்டிருந்தவர்களில் ஒன்பதுபேர் மரணமான தினம். அன்றைய நிகழ்வில் நானும் மாணவனாகக் கலந்துகொண்டிருந்தேன்.

இன்னும் அக்கலவரச்சூழல் என் கண்கள் முன்னால் காட்சி தருகின்றது. நான் மாநாட்டுக் கொடி கட்டப்பட்டிருந்த என் ரலி சைக்கிளுடன் முற்றவெளியில், யாழ் கோட்டையின் அகழிச்சுவருக்கருகில் நின்று கூட்ட உரைகளைக்கேட்டுக்கொண்டிருந்தேன். மேடையில் திருச்சி நைனார் முகம்மது என்று நினைக்கின்றேன் உரையாடிக்கொண்டிருந்தார். என் அருகில் என் எட்டாம் வகுப்பு யாழ் இந்துக்கல்லூரி ஆசிரியரான மகேந்திரன் (முன்னாள் யாழ்ப்பாண நகரத்து மேயர் ராஜா விசுவநாதனின் தம்பி) சைக்கிளுடன் உரை கேட்டுக்கொண்டிருந்தார்.

அப்போது. கூட்டம் நடந்தபோது வீதியையும் மறைத்துக்கொண்டு மக்கள் அமர்ந்திருந்தார்கள். பொலிசார் வந்து வீதியை மறைத்து அமர்ந்திருந்த மக்களைத் தடியடி கொண்டு கலைத்தார்கள். பதிலுக்கு அனைத்துப் பக்கங்களிலிருந்தும் மக்கள் தம் காலணிகளை அவர்கள் மேல் எறிந்து தாக்கினார்கள். பொலிசார் பின் வாங்கினார்கள். விரைவில் மீண்டு வந்தார்கள். மக்கள் மேல் கண்ணீர்ப்புகைக் குண்டுகளால் தாக்கினார்கள். மக்கள் யாரும் கதறி அழுததாகத் தெரியவில்லை. எல்லோரும் ஓடித்தப்பவே முயன்றார்கள். எல்லோரும் ஆத்திரத்துடன் கூடிய பயத்துடனேயே காணப்பட்டார்கள்.

என் வாழ்நாளில் கண்ணீர்ப்புகைக்குண்டுகளைப்பற்றி அறிந்திராத நான் பொலிசார் துப்பாக்கிக் குண்டுகளால் சுடுவதாகவே அச்சமயத்தில் நினைத்தேன். என் அருகிலும் குண்டொன்று வந்து விழுந்து புகையைக் கக்கியது. கண்கள் எரிய சைக்கிளையும் விட்டுவிட்டு ஓட முயன்றேன். கூட்டத்திலொருவர் அருகிலிருந்தவர் ' குப்புறப்படுங்கள். குப்புறப்படுங்கள். சுடுகிறான்கள் ' என்று கத்தியதும் நினைவிலுள்ளது. சிலர் நிலத்துடன் நிலம் படுத்தார்கள். நானும் அவ்விதம் படுத்தேன். கண்களின் எரிவு சிறிது நீங்கியதும் எழுந்தேன்.

பலர் கோட்டை அகழிக்குள் பாய்ந்து தப்பினார்கள். நான் அவ்விதம் அகழிக்குள் பாய்ந்து அகழிக்குள் முனியப்பர் கோயிலுக்குச் செல்வதற்காக இடையிலிருந்த நடைபாதையினால் அகழிக்குள் விழாமல் தப்பி மீண்டுவந்து , சைக்கிளை எடுத்து வீடு திரும்பினேன். வீடு செல்லும் வழியில் வந்து கொண்டிருந்த பஸ் வண்டிகளை மறித்து சம்பவத்தைத் தெரியப்படுத்தினோம். ராணி திரையரங்கும்

ஓடி வந்த மக்களை உள்வாங்கிப்பாதுகாப்பளித்ததாக நினைவு.
ஆரம்பத்தில் பொலிசார் மக்களை நோக்கிச் சுட்டது கண்ணீர்க்குண்டுகளை.
பின்னர் அவர்கள் மின்சாரக் கம்பிகளைச் சுட்டதில் அவை கீழே விழுந்து
இறந்தவர்கள்தாம் அன்று இறந்த அனைவரும் என்று பின்னர் அறிந்தேன்.
நிகழ்வுகள் இன்னும் பசுமையாக நினைவிலுள்ளன. நினைவுகள் பசுமையாக
நிலைத்து நின்றாலும் துயரம் தருபவை.

## 11. அராலி வடக்கு நினைவுகள்

என் பால்ய காலம் அதிகமாக வன்னி மண்ணில் கழிந்தால் (ஆரம்பத்தில் யாழ் வண்ணார்பண்ணை) , பதின்ம வயதுப்பருவம் யாழ் நகரிலும், அராலி வடக்கிலும் கழிந்தது. என் அம்மாவின் ஆசிரியப்பணி காரணமாகவே எமது இடமாற்றமும் நிகழ்ந்தது. என் சகோதர, சகோதரிகளுடன் ஒப்பிடும்பொழுது அவர்களது பால்ய மற்றும் பதின்மவயதுப்பருவத்தில் முக்கிய இடம் பெற்றிருப்பது அராலி வடக்கு. ஆனால் நான் என் பதின்மவயதுப் பருவத்தில் பெரும்பாலும் ஆச்சி வீட்டிலிருந்தே பாடசாலை சென்றதாலும் (யாழ் இந்துக்கல்லூரி), என் பதின்ம வயதினை ஆக்கிரமித்திருந்தது யாழ்ப்பாணமே.

அராலியென்றதும் என் நினவில் பசுமையாக நிற்பவை கல்லுண்டாய் வெளியும், காக்கைதீவுக் கடற்கரையும், கடற்கரையை நோக்கி விண்ணில் கோடு கிழிக்கும் நீர்க்காகங்களும், நவாலி மண் கும்பிகளும், பசுமையான வயல்வெளிகளும், அந்திகளில் கட்டுமரங்களில், படகுகளில் பயணிக்கும் மீனவர்களும், அராலிப் பாலமும், அராலி வடக்கினூடு சுழிபுரம் செல்லும் இ.போ.ச பஸ்ஸும்தாம்.

அதிகாலைகளில் சைக்கிளில் யாழ்ப்பாணம் செல்லும்போதும், அந்திப்பொழுதுகளில் சைக்கிளில் சைக்கிளில் வீடு திரும்புவதும் எனக்கு மிகவும் பிடித்தமான பொழுதுகள். குறிப்பாக அந்திப்பொழுதுகள் அற்புதமானவை. இன்பம் பயப்பவை. இன்னும் அவ்வந்திப்பொழுதுகள் நெஞ்சில் பசுமையாகவுள்ளன. ஓட்டுமடத்திலிருந்து காரைநகருக்குச்செல்லும் பாதை பிரிகிறது. அப்பாதை பின்னர் அராலியில் அராலி தெற்காகவும், அராலி வடக்காகவும் பிரிந்து, அராலி வடக்கினூடு செல்லும் பாதை நேராக வட்டுக்கோட்டையை ஊடறுத்துக்காரைநகரை நோக்கிச்செல்லும். ஓட்டுமடத்திலிருந்து பிரிந்ததும் உடன் தெரிவது யாழ் முஸ்லிம் மக்கள் குடியிருந்த பொம்மை வெளிக்குடியேற்றம்தான். யாழ் மேயர் துரையாப்பாவின் காலத்தில் அவர் முஸ்லிம் மக்களின் பேராதரவு பெற்றவராகவிருந்தார். அவரது காலத்தில் உருவான குடியேற்றத்திட்டமது. அதனைத்தாண்டிச் சென்றால் நாவாந்துறையிலிருந்து வரும் பாதை காரைநகர்நோக்கிச்செல்லும் பாதையுடன் வந்திணையும். அந்தச்சந்தியைத்தாண்டினால் புகழ்பெற்ற காக்கைத்தீவுக்கடற்கரையும் , மீன் சந்தையும் எதிரே விரியும். காக்கைதீவுச்சந்தையைக் கடந்தால் மீண்டும் பாதை வெளியினூடு ஊடறுத்துச்செல்லும்.

மேற்குப்புறத்தில் காக்கைதீவுக்கடலும், புல்வெளியும், கிழக்கில் வயல்களும், வயல்களை ஊடறுத்து நோக்கினால் தொலைவில் தனிமையில் மோனமியற்றும் துறவிகளாக நவாலி மண் கும்பிகளும் (இவை பண்டைய யாழ்ப்பாணத்தின் வரலாற்றை வெளிப்படுத்தும் மண் மேடுகள். தொல்லியல் வரலாற்று ஆய்வாளர் பொ.இரகுபதி ஆனைக்கோட்டை, நவாலை மண் கும்பிகளை ஆய்ந்து நூல்கள் எழுதியிருக்கின்றார்.) காணப்படும். தொடர்ந்து சென்றால் புகழ்பெற்ற

கல்லுண்டாய் வெளியும், புகழ்பெற்ற கல்லுண்டாய் வைரவர் ஆலயமும் எதிரே தெரியும். அதன் பின் செல்லும் பாதையின் மேற்குப்புறத்தே கல்லுண்யாய் உப்பளமும் அதனைத்தாண்டினால் செல்லும் பாதை அராலிப்பாலத்தைத் தாண்டியதும் இரண்டாகப் பிரியும். மேற்காகப்பிரியும் பாதை அராலி தெற்கு நோக்கிச்செல்ல , நேராகச் செல்லும் பாதை அராலி வடக்கை ஊடறுக்கும். இவ்விதம் ஊடறுக்கும் பாதையை , அராலி தெற்கு நோக்கிச்சென்ற பாதை மீண்டும் வட்டுக்கோட்டைச் சந்தியில் வந்து சந்தித்து, சங்கானை நோக்கிச் செல்லும்.

இந்த அராலிப்பாலம் ஒருவிதத்தில் புகழ்பெற்றது. யாழ்நகரின் புகழ்பெற்ற ஆறான வழுக்கியாறு காக்கைதீவுக்கடலுடன் கலப்பது இந்தப்பாலத்தினூடுதான். இந்த வழுக்கியாறு உண்மையின் நீண்டதொரு வாய்க்காலே. இதுபற்றிச் சுவையானதொரு புதினத்தை எழுத்தாளர் செங்கை ஆழியான் 'நடந்தாய் வாழி வழுக்கியாறு' என்று எழுதியிருக்கின்றார். அது சிரித்திரனில் வெளியான குறுநாவல். பின்னர் சிரித்திரன் பிரசுரமாகவும் வெளியானது.

அந்திப்பொழுதுகளில் தென்றலின் சிலுசிலுப்பில் , வயல்களை, வெளிகளை, ஒருபுறம் விரியும் கடலினை ஊடறுத்துப்பயணிப்பது அற்புதமானதோர் அனுபவம். அந்திபொழுதுகளில் மெல்லிய இருள் பரவத்தொடங்கும். கட்டுமரங்களில், படகுகளில் மீனவர்கள் தொழிலுக்குச்செல்வது நிழல்களாகத்தென்படும். காக்கைதீவுக்கடலும் , சிவந்த அடிவானும் கலக்குமிடத்தில் அந்திச்சூரியன் பேரெழிலுடன் மூழ்கும் காட்சி அனுபவித்து உணரவேண்டியதொன்று.

சில சமயங்களில் காக்கைதீவுக் கடற்கரையைத்தாண்டியதும் , மேற்குப்புறத்தே கடலை நோக்கி விரியும் வெளியில் மீனவர்கள் பெரும் சூலைகளில் கடலட்டைகளை அவிய வைத்து, வீதியின் ஓரமாக அவிந்த கடலட்டைகளைக்காயப்போடுவார்கள். கடலட்டையை பிறநாடுகளுக்கு ஏற்றுமதி செய்தார்கள். அந்தப்பிராந்தியமெங்கும் அக்காலங்களில் கடலட்டை அவியும், காயும் மணமே பரந்துகிடக்கும்.

அதனைத்தாண்டிச்சென்றால் நவாலிபகுதியிலிருந்து வரும் சிலர் ஆட்டு மந்தைகளை ஓட்டிவந்து , புல்வெளியில் (மேற்குப்புறமாகவிருந்த) மேயவிட்டுக்கொண்டிருப்பார்கள். அவர்களில் ஒருவர் 'எண்ணெய்க்கார ஐயா'. இவரிடமிருந்துதான் எங்கள் ஆச்சி நாற்பது வருடங்களாக நல்லெண்ணெய் வாங்கிவந்தார். வீட்டில் செக்கு கொண்டு உருவாக்கும் நல்லெண்ணெய்யை இவரிடமிருந்து வாங்குவதற்கென்று வாடிக்கையாளர்கள் யாழ் நகரில் பலரிருந்தார்கள். கடுக்கனுடன் , எப்பொழுதும் சிரித்த முகத்துடன் காணப்படும் இவரை நாம் 'எண்ணைக்கார ஐயா' என்றே சிறுவயதில் அழைத்தது ஞாபகத்துக்கு வருகிறது.

வடக்கு அராலியினூடு சென்று, வட்டுகோட்டையில் திரும்பி சுழிபுரம் செல்லும் இ.பொ.ச பஸ்ஸை ஒருவிதத்தில் என்னால் மறக்க முடியாது. அதற்குக்காரணம்

அந்தப் பஸ்ஸின் 'கண்டக்டர்'தான். அவரது பெயர் மணியம் என்று நினைக்கின்றேன். கட்டபொம்மன் மீசையும், சந்தனப்பொட்டும், சிரித்த முகமுமாகக் காணப்படுமிவர், பிரயாணிகளுடன் மிகவும் கலகலப்பாக, வேடிக்கையாகப் பழகுவார். மிகவும் கலகலப்பாகத்தன் பணியினைச் செய்ததுடன், பயணிகளையும் இன்பமுற வைத்தவரிவர். அதனால்தான் இன்னும் என் நெஞ்சில் பவனிவருகின்றார்.

## 12. சிரித்திரனில் 'மையல்'

சிரித்திரன் சஞ்சிகை ஒரு சமயம் புதுக்கவிதைப்போட்டியொன்றினை நடாத்தியது. அப்பொழுது நான் யாழ் இந்துக்கல்லூரி மாணவன். அதற்கு நானும் சிறு கவிதையொன்றினை அனுப்பியிருந்தேன். சிரித்திரன் சிரிக்க வைப்பதால் வாசித்ததும் சிரிப்பு வரவேண்டுமென்று எண்ணி அனுப்பிய சிறு கவிதை. அப்போட்டியில் கவிதைகள் எதுவும் பரிசு பெறாவிட்டாலும், பிரசுரத்துக்காகப் பாராட்டுக்குரியவையாகச் சில கவிதைகள் தேர்ந்தெடுக்கப்பட்டுப் பிரசுரிக்கப்பட்டிருந்தன. அதிலொன்றுதான் இக்கவிதை. அந்த மாணவப்பருவத்தில் எழுதிய இந்தக் கிறுக்கலை மீண்டும் கண்டபோது புதையலே கிடைத்த மகிழ்ச்சி.

**'மை'யல்! - வ.,ந.கிரிதரன் -**

கண் கறுக்க ஒரு'மை';
கூந்தல் நரை தடுக்க
ஒரு'மை';
உதட்டுச் சிவப்பை
உலகிற் கறிவிக்க
ஒரு 'மை';
கை நகங்களிற்கும்
'மை' என்று
'மை'யிட்டுச் செல்லும்
இவளைப் புது'மை'ப்
பெண்ணென
அழைக்கலாமோ?

## 13. யாழ் இந்துக்கல்லூரி: மேலும் சில நினைவுகள்.......

யாழ் இந்துக்கல்லூரி கல்விக்கும், விளையாட்டுக்கும் பெயர் போன கல்லூரிகளிலொன்று. மகாஜனா கலை, இலக்கியத்தில் பெயர் போன கல்லூரி. ஹாட்லிக் கல்லூரியை இன்னுமொரு வடமராட்சியின் 'யாழ் இந்து' என்று கூறலாம். நாங்கள் சிறுவர்களாக இருந்தபோது, யாழ் இந்துக் கல்லூரியின் கிரிக்கட் குழுவில் எங்களைக் கவர்ந்தவர்களாக சூரி, குகன் (பொன்னம்மான்) ஆகியோரையே நான் குறிப்பிடுவேன். இவர்களிருவரும் சொட்டுவதில்லை. பந்தை விளாசுவதில் (Hitters) வல்லவர்கள். சில நேரங்களில் நின்று பிடிப்பார்கள்; சில நேரங்களில் ஒரு சில விளாசல்களுடன் போய் விடுவார்கள். பந்து வீச்சாளர்களில் எனக்குப் பிடித்தவர்களாக நிருத்தானந்தனையும், வசந்தனையும் குறிப்பிடுவேன். சூரி சுழல் பந்து வீசுவதில் வல்லவர். ஹட்டன் நாஷனல் வங்கியில் பணியாற்றிக்கொண்டிருந்த சூரி பின்னர் யாழ்நகரில் இலங்கை இராணுவத்தின் ஷெல் தாக்குதலொன்றில் கொல்லப்பட்டதாகப் பின்னர் கேள்விப்பட்டேன். குகனின் அண்ணன் நரேன் (யோகி). யோகியின் கிரிக்கட் ஆட்டம் குகனைப் போல் விளாசுதல்ல. நிதானமானது. ஆனால் நரேன் விளையாட்டில் பல சாதனைகளைச் செய்தவர். குண்டெறிதல், ஈட்டியெறிதல் மற்றும் இன்னுமொரு விளையாட்டு நீளம் பாய்தல் அல்லது உயரம் பாய்தல் ஆகியவற்றில் , பல வருடங்களுக்கு முன்னர் அவரது தந்தை ஆற்றிய சாதனைகளை முறியடித்தவர். அவ்விதம் முறியடித்த நிகழ்வுகளை சிறுவனாக நின்று அவதானித்திருக்கின்றேன். நரேனுடைய தந்தையார் யோகரத்தினம் ஒரு நில அளவையாளர். தாயார் யாழ் இந்து மகளிர் கல்லூரி ஆசிரியை. அம்மாவும் யாழ் இந்து மகளிரி கல்லூரியின் ஆசிரியைகளிலொருவர். அம்மா யாழ் இந்துக் கல்லூரியில் ஆரம்பத்தில் சிறிது காலம் ஆசிரியையாகவும் இருந்திருக்கின்றாரென்று கூறியதாக ஞாபகம். ஒரு காலத்தில் யாழ் இந்துவில் ஆசிரியைகளும் கற்பித்திருக்கின்றார்களென்று நினைக்கின்றேன்.. அம்மாவின் திருமணத்துக்கு திருமதி யோகரத்தினம் பரிசாகக் கொடுத்திருந்த வெள்ளித்தட்டுகளும், வெள்ளிக் குவளைகளும் நான் நாட்டை விட்டுப் புறப்படும் வரையில் வீட்டிலிருந்தன. அவற்றில் வெள்ளித்தட்டொன்று இன்னும் என்னுடைய கடைசித் தங்கையிடம் உள்ளது.

கிரிக்கட்டில் 'சொட்டு'வதற்குப் பெயர் பெற்றவர் 'விட்டமின்' என்று அழைக்கப்பட்டவர். விளையாட்டை இழுத்தடித்து வெற்றி, தோல்வி இல்லாமல் செய்ய வேண்டுமென்றால் இவரைத்தான் நம்பியிருப்பார்கள். இவர் பின்னர் யாழ் இந்துக் கல்லூரிக் கிரிக்கட் குழுவின் தலைவராகவுமிருந்தவர். அப்பொழுதெல்லாம் தெற்கிலிருந்து 'ரோயல் கல்லூரி' புனித தோமஸ் கல்லூரி போன்ற கல்லூரிகளிலிருந்து துடுப்பெடுத்தாட்டக் குழுக்கள் யாழ் இந்துக் கல்லூரிக்கு வந்து யாழ் இந்துவுடன் மோதுவது வழக்கம். அவ்விதம் எங்களது மாணவப் பருவத்தில் வந்த ஒருவர் பின்னர் இலங்கை அணி 'டெஸ்ட் மாட்ச்'சுகளில் விளையாடத் தொடங்கியபோது ஆடிப் புகழ் பெற்ற விளையாட்டு வீரர்களிலொருவர். அவர்: அர்ஜுனா ரணதுங்க.

ஒருமுறை யாழ் சென்ரல் 'கொலிஜ்' மைதானத்தில் ஆஸ்திரேலியாவிலிருந்தும் , பாகிஸ்தானிலிருந்தும் வந்திருந்த 19 வயதிற்குட்பட்ட மாணவர்களுடன் , யாழ் பாடசாலைகளிலிருந்தும் தெரிவு செய்யப்பட்ட மாணவர்கள் மோதியது ஞாபகத்திலுள்ளது. யாழ் இந்துக் கல்லூரியிலிருந்து சூரி யாழ் மாணவர் குழுவில் விளையாடினாரென்று நினைக்கின்றேன். பாகிஸ்தான் குழுவில் விளையாடிய மாணவர்களிலொருவர் பின்னர் பாகிஸ்தான் 'டெஸ்ட் மாட்ச்'சுகளில் விளையாடிய ஜாவிட் மியாண்டாட். ஆஸ்திரேலிய அணியில் மைக்கல் லாங் என்பவர் இரு தடவைகள் பந்தைப் பிடிக்கச் சந்தர்ப்பங்கள் கொடுத்து, அதிருஷ்ட்டவசமாகத் தப்பி 158 ஓட்டங்கள் எடுத்ததும் இன்னும் நினைவிலுள்ளது.

நான் பார்த்த இன்னுமொரு முக்கியமான கிரிக்கட் போட்டி மொறட்டுவையில் நடைபெற்ற மேற்கு இந்திய நாடுகளுக்கும் , இலங்கை அணிக்குமிடையில் நடைபெற்ற போட்டியாகும். அப்பொழுது நான் மொறட்டுவைப் பல்கலைக்கழகத்தில் படித்துக்கொண்டிருந்தேன். இலங்கை அணி அக்காலகட்டத்தில் 'டெஸ்ட் மாட்ச்'சுகளில் விளையாட ஆரம்பித்திருக்கவில்லை. அந்த 'மாட்சில்' விளையாடிய மேற்கிந்திய நாடுகளைச் சேர்ந்த வீரர்களில் முக்கியமான இருவர்: காளிச்சரண், மற்றவார் கிளைவ் லாயிட். கிளைவ் லாயிட் அன்று மேற்கிந்தியக் குழுவுக்குத் தலைமை தாங்கினார். கிளைவ் லாயிட் அந்தப் போட்டியில் ஓரிரு 'சிக்ஸர்ஸ்' அடித்தது ஞாபகத்திலுள்ளது. இலங்கை அணியில் துலிப் மெண்டிஸ் திறமையாக விளையாடி 63 ஓட்டங்கள் எடுத்ததாக நினைவு.

யாழ் இந்துக் கல்லூரி உதை பந்தாட்ட விளையாட்டிலும் பெயர் பெற்றது. எங்கள் காலகட்டத்தில் எனக்குப் பிடித்த இருவர் கண்ணாடி ராஜேந்திரன் , பாசையூரைச் சேர்ந்த விமலதாசன் (என்றுதான் நினைக்கின்றேன்). கண்ணாடி உதைப்பந்தாட்டக் குழுவின் முன்னிலை ஆட்டக்காரராக விளையாடுபவர். பந்து கிடைத்துவிட்டால் விரைவாக அதைக் கொண்டு சென்று 'கோல்' அடிப்பதில் வல்லவர். மகாஜனாக் கல்லூரியும் உதைப்பந்தாட்டத்திற்குப் பெயர்பெற்ற கல்லூரி. அக்காலகட்டத்தில் கண்ணாடியைப் போல் அங்கு விளையாடுபவரை 'முயல்' என்று அழைப்பார்கள். பெயர் ஞாபகமில்லை.

விமலதாசன் எதிராளியிடமிருந்து பந்தினை வெட்டி, ஏய்த்து , சாதுரியத்துடன் (Dodge) விளையாடுவதில் வல்லவர். இவரிடம் பந்து கிடைத்துவிட்டால் அதனை அவர் விளையாடும் அழகு பார்ப்பதற்கு அற்புதமானது. அக்காலகட்டத்தில் அவரது ஆட்டத்தினை விரும்பி இரசிப்பேன்.

## 14. என்னைக்கவர்ந்த யாழ் இந்து உதைபந்தாட்ட வீரர்கள் இருவர்!

யாழ் இந்துக் கல்லூரி உதை பந்தாட்ட விளையாட்டிலும் பெயர் பெற்றது. எங்கள் காலகட்டத்தில் எனக்குப் பிடித்த இருவர் கண்ணாடி ராஜேந்திரன் , குருநகரைச் சேர்ந்த விமலதாசன் . கண்ணாடி உதைப்பந்தாட்டக் குழுவின் முன்னிலை ஆட்டக்காரராக விளையாடுபவர். பந்து கிடைத்துவிட்டால் விரைவாக அதைக் கொண்டு சென்று 'கோல்' அடிப்பதில் வல்லவர். விமலதாசன் குருநகர் 'பாடும் மீன்' உதைபந்தாட்டக் குழுவைச் சேர்ந்தவர் என்பதும் குறிப்பிடத்தக்கது.

விமலதாசன் எதிராளியிடமிருந்து பந்தினை வெட்டி, ஏய்த்து , சாதுரியத்துடன் (Dodge) விளையாடுவதில் வல்லவர். இவரிடம் பந்து கிடைத்துவிட்டால் அதனை அவர் விளையாடும் அழகு பார்ப்பதற்கு அற்புதமானது. அக்காலகட்டத்தில் அவரது ஆட்டத்தினை விரும்பி இரசிப்பேன்.

எனக்குப் பிடித்த யாழ் இந்து துடுப்பெடுத்தாட்ட வீரர்களென்றால் பலரைக் கூறலாம். ஆனால் உதைபந்தாட்ட வீரர்களென்றால் நினைவுக்கு உடனையாக வருபவர்கள் இவர்கள் இருவரும்தாம். மேலும் பலர் , எனக்குத் தெரிந்தவர்கள் , விளையாடியிருக்கின்றார்கள். ஆனால் அக்காலகட்டத்தில் நான் விரும்பி இரசித்த ஆட்டக்காரர்கள் இவர்கள் இருவரும்தாம்.

கண்ணாடி ராஜேந்திரன்இவர் எனக்கு ஒரு வருடம் 'சீனியர்'. இவருடன் நேரடிப்பழக்கமில்லை. ஒரு முறை யாழ் இந்துக்கல்லூரிக்கும் , மகாஜனாக் கல்லூரிக்குமிடையில் நடைபெற்ற போட்டியில் இவரது விறுவிறுப்பான, வேகமான ஆட்டம் என்னைக் கவர்ந்துவிட்டது. அவ்வருடம் மகாஜனாக் கல்லூரியில் இவரது நிலையில் விளையாடியவர் 'முயல்' என்னும் பட்டம் பெயருக்குரியவர். முயல் மாதிரி விரைந்தோடுவதால் அவருக்கு அப்பெயர் என்று கூறினார்கள். அவரது ஓட்டத்தைப் பார்த்தபோது நினைத்துக்கொண்டேன் "முயல் அவருக்கு நல்ல, பொருத்தமான பெயர்"தானென்று. உண்மையில் அவர் ஒரு முயல்தான்.

## 15. மறக்க முடியாத யாழ் இந்து , யாழ்ப்பாணக் கல்லூரித் துடுப்பாட்டப் போட்டி!

நான் யாழ் இந்துக்கல்லூரியில் 71-77 வரை கல்வி பயின்றவன்.
அக்காலகட்டத்தில் நான் மிகவும் ஆர்வத்துடன் யாழ் இந்துக்கல்லூரியின் உதைபந்தாட்ட, துடுப்பாட்ட மற்றும் அனைத்து விளையாட்டுப்போட்டிகளையும் பார்த்த காலகட்டமென்றால் அது 71 -74 வரையிலான காலகட்டமே.
அண்மையில் ஈழநாடு பத்திரிகையின் பழைய இதழ்களைப் புரட்டிக்கொண்டிருக்கையில், அதன் 24.2.1972 பதிப்பில் வெளியான யாழ் இந்துக்கல்லூரிக்கும், யாழ்ப்பாணக் கல்லூரிக்குமிடையில் யாழ் இந்துக் கல்லூரி மைதானத்தில் நடைபெற்ற துடுப்பாட்டப்ப்போட்டி பற்றிய குறிப்பொன்று என் கவனத்தை ஈர்த்ததுடன், சிந்தனைக்குருவியையும் அக்காலகட்டத்தை நோக்கிப் பறக்க வைத்து விட்டது.

மறக்க முடியாத துடுப்பாட்டப் போட்டியென்பேன். முதலில் ஆடிய யாழ்ப்பாணக்கல்லூரி 174 ஓட்டங்களை எடுத்திருந்த நிலையில் ஆடிய யாழ் இந்து 87 ஓட்டங்களை மட்டுமே எடுத்திருந்தது. இந்நிலையில் இரண்டாம் இன்னிங்ஸில் ஆடிய யாழ்ப்பாணக் கல்லூரி 96 ஓட்டங்களையே பெற்றது. யாழ் இந்துக்கல்லூரியின் காப்டன் சூரியகுமாரன் (சூரி) 61 ஓட்டங்களைக்கொடுத்து 4 விக்கட்டுகளையெடுத்தார். பந்து வீச்சாளரான வசந்தகுமார் ('டட்டடாங்') எட்டு ஓட்டங்களைக் கொடுத்து மூன்று விக்கட்டுகளை வீழ்த்தினார். சூரி சுழற்பந்து வீச்சாளர். வசந்தகுமார் வேகப்பந்து வீச்சாளர். தொடர்ந்து துடுப்பெடுத்தாடிய யாழ் இந்துவின் சார்பில் சிறப்பாக ஆடிய சூரி 73 ஓட்டங்களையெடுத்து ஆட்டமிழக்காமலிருந்தார். யாழ் இந்து ஆறு விக்கட்டுகளையிழந்து 186 ஓட்டங்களைப்பெற்று வெற்றி பெற்றது.

வசந்தகுமார், சூரி ஆகியோரின் பந்து வீச்சும், சூரியின் சிறப்பான துடுப்பாட்டமும் போட்டியில் யாழ் இந்து வெற்றிபெறத் துணை புரிந்தன.
யாழ் இந்துக்கல்லூரியின் துடுப்பாட்ட வீரர்களில் அவ்வயதில் என்னை மிகவும் கவர்ந்தவர்களாகக் குகனையும் (பொன்னம்மான்), சூரியையும் குறிப்பிடுவேன். பந்து வீச்சாளர்களில் நிருத்தானந்தன், வசந்தகுமார் ஆகியோரைக் குறிப்பிடுவேன். சூரியும், குகனும் 'ஹிட்டர்'கள். மிகவும் விரைவாக ஓட்டங்களைக் குவிப்பதில் வல்லவர்கள்.

மேற்படி ஈழநாடுப் பத்திரிகைச் செய்தி மேற்படி போட்டியை மீண்டும் நனவிடை தோய வைத்து விட்டதுடன் , சூரியகுமாரன் பற்றியும் நினைக்க வைத்து விட்டது. யுத்தச்சூழல் பலியெடுத்தவர்களில் ஒருவர் அவரென்பது துயரகரமானது. கோட்டையிலிருந்து இராணுவம் அடித்த ஷெல் தாக்குதலில் அவர் உயிரிழந்ததாக அறிந்திருக்கின்றேன். அப்பொழுது அவர் யாழ் பஸ் நிலையத்துக்கருகிலிருந்த ஹ்ட்டன் நாஷனல் வங்கியில் பணியாற்றிக்கொண்டிருந்ததாகவும் அறிகின்றேன்.

## 16. பண்ணைக்கடலில்.....

பண்ணைக்கடலில் ஒருவர் தனித்து மீன்பிடித்துக்கொண்டிருந்ததைப்பற்றி எழுத்தாளர் அ.யேசுராசா முகநூலில் பதிவிட்டிருந்தார். அது என் பழைய ஞாபகமொன்றினைக் கிளறிவிட்டது. யாழ் இந்துக்கல்லூரியில் பத்தாம் வகுப்பிலிருந்த சமயம். ஒருமுறை நண்பர்கள் சிலருடன் தூண்டில் எடுத்துக்கொண்டு மீன்பிடித்துப்பார்ப்போமே என்று சென்றோம். அங்கு படகொன்றிலிருந்த மீனவர் ஒருவரிடம் எங்கள் விருப்பத்தைக்கூறியபோது அவர் எங்களைத்தனது படகில் பண்ணைக்கடலில் சிறிது தூரத்துக்குக்கொண்டு சென்று தன் படகிலிருந்து மீன் பிடிக்க அனுமதித்தார். அன்று நாங்கள் பல தடவைகள் முயன்றும் மீன்கள் எதுவும் அகப்படவில்லை. ஏமாற்றத்துடன் திரும்ப விரும்பாத நாம் , அண்மையில் மீன்களை வெற்றிகரமாகப்பிடித்து வந்து விற்றுக்கொண்டிருந்த மீனவர்கள் சிலரிடம் மீன்களை வாங்கிக்கொண்டு நாங்கள் பண்ணைக்கடலில் பிடித்த மீன்களாகப்பெருமிதமடித்துக்கொண்டோம்.

இந்தப்பண்ணைக்கடலை நினைத்ததும் எனக்கு இன்னுமொரு ஞாபகமும் எழுவதுண்டு. இந்தப்பண்ணைக்கடல் சுழிகள் நிறைந்த கடலென்று நினைக்கின்றேன். யாழ் இந்து மாணவரான 'அனுமான்' என்று பட்டப்பெயரைக்கொண்ட மாணவரொருவர் பண்ணைக்கடலின் சுழிகளுக்குள் அகப்பட்டு உயிரிழந்த சம்பவமே அவ்விதம் நினைவுக்கு வருவதுண்டு.

இந்தப்பண்ணைக்கடல் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த கடல் கூட. யாழ்ப்பாணத்தை ஆண்ட தமிழ் அரசர்களான ஆரியச்சக்கரவர்த்திகள் காலத்தில் பண்ணைத்துறையும், கொழும்புத்துறையும் புகழ் பெற்ற துறைமுகங்களாக, கோட்டைகளுடன் கூடியதாக விளங்கின. போர்த்துகீசர், ஒல்லாந்தர் காலத்தில் கோட்டைகள் கட்டப்பட்டு புகழுடன் விளங்கின. ஒல்லாந்தர் கட்டிய கோட்டையே இன்றும் அங்கு காணப்படும் கோட்டை.

அண்மைக்காலத்தில் கூட விடுதலைப்புலிகள் மற்றும் பல்வேறு தமிழ் விடுதலை அமைப்புகளின் முற்றுகைக்குள் இலங்கை அரச படையினர் சிக்குண்டு கிடந்தது ஞாபகத்தில் வருகின்றது.

பண்ணைக்கடலுக்கு அண்மையிலுள்ள கொட்டடி என்பது பண்ணைத்துறையில் அமைந்திருந்த கோட்டையின் திரிபாக அதாவது கோட்டையடி என்பதன் திரிபாக இருந்திருக்க வேண்டுமென்று தென்படுகின்றது.

## 17. அம்மாவின் நினைவாக...

இன்று அம்மாவின் நினைவு தினம். அவர் ஓர் ஆசிரியையாக விளங்கியவர். யாழ் இந்துக்கல்லூரி, யாழ் இந்து மகளிர் கல்லூரி, வவுனியா மகா வித்தியாலயம் மற்றும் அராலி இந்துக்கல்லூரி ஆகிய பாடசாலைகளில் ஆசிரியையாகக் கடமையாற்றியவர். 'நவரத்தினம் டீச்சர்' என்றால் தான் அவரைப் பலருக்குத்தெரியும். யாழ் இந்து மகளிர் கல்லூரிக் காலகட்டத்தைச்சேர்ந்த அவரது சக ஆசிரியர்களுக்கு அவரை 'மங்கை' என்றால்தான் தெரியும். அதுதான் அவரது வீட்டுப்பெயர். ஆனால் அவரது இயற்பெயர் மகேஸ்வரி. அது யாருக்குமே தெரியாது. கண்டிக்கவே தெரியாத ஆசிரியர்களில் அவருமொருவர். புவியியல், ஆங்கிலம் மற்றும் 'ஹோம் சயன்ஸ்' ஆகிய துறைகளில் பாடங்களை அதிகமாகக் கற்பித்தவர்.

வவுனியாவில் இருந்த காலகட்டத்தில் ஒவ்வொரு நாளும் அதிகாலைகளில் நேரத்துடன் எழுந்து, அனைவருக்கும் உணவு தயாரித்து, மதிய நேர உணவினை அனைவருக்கும் தயார் செய்வார். அதிகாலைகளில் நாங்கள் குழந்தைகள் அனைவரும் அவர் பின்னால் கோழிக்குஞ்சுகளாகச் சென்ற காலைகள் இன்னும் பசுமையாக நினைவிலுள்ளன. மாலை நேரங்களில் வீடு திரும்பும்போது நான் என் நண்பர்களுடன் திரும்பி விடுவேன். ஆனால் காலைகளில் பாடசாலை செல்லும்போது அவருடனேதான் செல்வதுண்டு.

நன்கு பாடும் திறமை மிக்கவர். சிறுவயதில் அவர் பாடும் பாரதியார் விடுதலைக்கீதங்களை (குறிப்பாகத் 'தாயின் மணிக்கொடி பாரீர்), 'மிஸ்ஸியம்மா' திரைப்படப்பாடலான 'பிருந்தாவனமும் நந்தகுமாரனும்' ஆகிய பாடல்களை அவர் அவ்வப்போது பாடக்கேட்டு இரசித்திருப்பதும் இன்னும் பசுமையாக ஞாபகத்திலுள்ளது.

அவரும் வாசிப்புப் பழக்கம் மிக்கவர். ஆனால் பெரும்பாலும் ஆழ்ந்த வாசிப்பு மிக்கவர் அல்லர். மணியனின் 'நெஞ்சோடு நெஞ்சம்', 'உன்னை ஒன்று கேட்பேன்' , கலைமணியின் (கொத்தமங்கலம் சுப்பு) 'மிஸ் ராதா' போன்ற ஆனந்த விகடன் தொடர்களுடன், மில்ஸ் அன் பூன் ((Mills and Boon) ஆங்கில ஜனரஞ்சக நாவல்களுடன் அவரது வாசிப்பு நின்று விட்டது. ஆனால் அவர் மு.வரதராசனின் நாவல்களை வாசித்திருக்கின்றார். வவுனியா மகா வித்தியாலய நூலகத்திலிருந்து பல மு.வ.வின் நாவல்களை இரவல் வாங்கிக்கொண்டு வருவார். மு.வ.வின் 'கரித்துண்டு', 'நெஞ்சில் ஒரு முள்', 'கள்ளோ காவியமோ', 'பெற்ற மனம்', 'அகல் விளக்கு' , 'அல்லி', 'மண்குடிசை' ஆகிய நாவல்களை என் வாசிப்பின் ஆரம்பக் காலகட்டத்தில் அப்பொழுதுதான் வாசித்திருக்கின்றேன். என் பல்கலைக்கழக நாள்களில் எதிர்பாராமல் வீடு திரும்பும் என்னைப்பார்த்து மிகவும் மகிழ்ச்சி அடைவார். இட்லி, தோசை என்று எங்களுக்குப் பிடித்த உணவு வகைகளை அதிகம் தயாரித்து எங்களைத்திக்கு முக்காட வைத்து விடுவார். மீண்டும் பல்கலைக்கழகம் திரும்பும்போது பெரும்பாலும் அதிகாலை

யாழ்தேவியில்தான் நான் திரும்புவது வழக்கம். அந்நாள்களில் நேரத்துடன் எழுந்து, உணவு தயாரித்துத்தருவார். விடைபெறும்போது சிறிது சோகத்துடன் காட்சியளிக்கும் அவரது முகம் இன்னும் ஞாபகத்திலுள்ளது.

அம்மா என்றதும் உடனடியாக ஞாபகத்துக்கு வரும் இன்னுமொரு விடயம்: அவர் இரு தடவைகள் விபத்துகளில் சிக்கி மயிரிழையில் உயிர் தப்பியிருக்கின்றார்/ முதலாவது தடவை புகையிரதத்துடனும் , இரண்டாவது தடவை இலங்கை போக்குவரத்துச்சபை  பஸ்ஸொன்றுடனும் நடைபெற்ற விபத்துகள் அவை. அப்பொழுது வவுனியா மகாவித்தியாலய அதிபராகவிருந்த அரியரத்தினம் என்பவரின் தாயாரின் இறுதிச்சடங்குகளில் கலந்துகொள்வதற்காக அம்மா, இராமச்சந்திரன் டீச்சரின் மொரிஸ் மைனரில் சென்று யாழ்ப்பாணம் நோக்கிச் சென்றுகொண்டிருந்தார். ராமச்சந்திரன் டீச்சரே காரை ஓட்டிக்கொண்டிருந்தார். அவரருகில் அவரது கணவர் அமர்ந்திருந்தார். மன்னார் ரோடு வழியாக, காமினி மகா வித்தியாலயத்துக்கு அண்மையிலான புகையிரத இருப்புப்பாதையைக் கடந்துகொண்டிருக்கையில் அப்பொழுது அவ்வழியாக விரைந்துகொண்டிருந்த யாழ் தேவி காரின் முன் 'பம்ப'ருடன் மோதி. காரை இழுத்துப் புரட்டி விட்டது. நல்லவேளையாகக் காரையும் கூடவே இழுத்துச் செல்லவில்லை. அந்த விபத்தில் பயணித்த மூவரும் தப்பி விட்டார்கள். ராமச்சந்திரன் டீச்சரின் கணவருக்கு மட்டும் காயம்; உள்காயமும் கூட. அது பின்னர் அவரது வாழ்நாள் முழுவதும் அவரைத் துன்புறுத்தியதாக அம்மா கூறுவதைக் கேட்டிருக்கின்றேன். அடுத்தது நடைபெற்றது.. அராலி இந்துக்கல்லூரியில் அம்மா கற்பித்துக்கொண்டிருந்த காலகட்டத்தில்... யாழ்ப்பாணத்திலிருந்து காரை நகர் நோக்கிச் சென்றுகொண்டிருந்த இ.போ.ச. பஸ் 784 பஸ்ஸில் அம்மா பயணித்துக்கொண்டிருந்தார். அது அன்று பயணிகளுடன் கல்லுண்டாய் வெளியில் வீதிக்கருகிலிருந்த வயல் வெளிக்குள் குடை சாய்ந்துவிட்டது. அதிலும் பயணிகள் அனைவரும் எவ்விதக் காயங்களுமற்றுத் தப்பி விட்டனர்.

அம்மா ஆசிரியையாக விளங்கிய காலகட்டத்தில் வவுனியா மகா வித்தியாலயத்தில் ஒருமுறை  நான் படித்த வகுப்புக்கும் ஆசிரியையாக இருந்தார். அவர் ஆங்கிலம் மற்றும் 'ஹோம் சயன்ஸ்' ஆகிய பாடங்களையே பிரதானமாக எடுத்தாலும், புவியியல் போன்ற பாடங்களையும் கற்பித்துக்கொண்டிருந்தார். அப்பொழுது எங்களுக்கு அவர் புவியியல் படிப்பித்துக்கொண்டிருந்ததாக ஞாபகம். அப்பொழுது அவர் அவ்வப்போது குட்டிக் கதைகளைக் கூறுவது வழக்கம். அவ்விதம் கூறிய கதைகளுள் ஒன்று செம்மணிப்பேய் பற்றியது.

செம்மணி மயானத்தில் எரிந்து கொண்டிருந்த பிரேதமொன்றின் நெஞ்சின் மேல் வைக்கப்பட்டிருந்த மரக்கட்டை விலகி, பாதியில் அது தூக்கி எறியப்பட்டு இருந்த நிலையில் அருகில் காணப்பட்டிருக்கின்றது. நள்ளிரவில் அவ்வழியாகச் சென்றுகொண்டிருந்த ஒருவர் அதனைக்கண்டு பேயொன்று வழியில் குந்திக்கொண்டிருக்கின்றது என்று அலறி அடித்துக்கொண்டு ஓடியதைப்பற்றிய கதை அது. அந்தக் கதையும் அம்மாவின் நினைவுடன் எப்பொழுதும் எனக்குத்தோன்றுவது வழக்கம்.

## 18. அம்மா நினைவுட்டிச் சிறகடிக்கும் நினைவுக்குருவி.

மார்ச் 26, அம்மாவின் நினைவு நாள். நவரத்தினம் டீச்சர் என்று அன்புடன் அவரது மாணவர்களாலும், 'மங்கை' என்று அவரது சிநேகிதிகளாலும் அன்புடன் அழைக்கப்பட்ட அவரது நினைவு நாள் என் சிந்தையில் அவருடன் கழித்த நாள்களை நினைவு கூர்ந்திட வைக்கின்றது. யாழ் இந்துக் கல்லூரி, யாழ் இந்து மகளிர் கல்லூரி, வவுனியா மகா வித்தியாலயம், அராலி இந்துக்கல்லூரி என அவர் ஆசிரியராகப் பணிபுரிந்த பாடசாலை மாணவர்களைத் தன் அன்பால், சிரிப்பால், மென்மையான அணுகுமுறையினால் கட்டிவைத்தவர் அவர். வாழ்நாளில் ஆத்திரப்பட்டுப் பேசி நான் பார்த்ததில்லை. சில சமயங்களில் குரலில் சிறிது கண்டிப்பைக் காட்ட முற்பட்டாலும் கூட அக்கண்டிப்பை அவரால் வெளிப்படுத்தவே முடிந்ததில்லை.

என் பால்யபருவத்தில் ஆரம்பத்திலிருந்து ஏழாம் வகுப்புவரை வவுனியா மகா வித்தியாலயத்தில் படித்த காலகட்டத்து நினைவுகள் அழியாத கோலங்கள். அதிகாலையிலேயே எழுந்து, காலைச்சாப்பாடு, மதியச்சாப்பாடு எல்லாம் தயாரித்து, மதிய உணவையும் பார்சல்களாகக் கட்டி அல்லது 'எவர்சில்வர்' தூக்கு பாத்திரத்திலிட்டு பாடசாலை அழைத்துச் செல்வார். குழந்தைகள் நாமும் குருமண்காட்டிலிருந்து பாடசாலைக்கு அவரணைப்பில் பின் தொடர்வோம். அதிகாலை நேரங்களில் ஸ்டேசன் 'றோட்டின்' ஒரு புறத்தே பசிய வயல்கள் காட்சியளித்தன. பச்சைக் கிளிகள், குக்குறுபான்கள், ஆலாக்கள், மைனாக்கள், காடைகள், சிட்டுக் குருவிகள், மாம்பழத்திகள், நீண்ட வாற் கொண்டை விரிச்சான் குருவிகள், நீர்க்காகங்கள், மணிப்புறாக்கள்,.. எனப்பல்வகைப்புள்ளினங்களின் மலிந்திருக்கும் வனப்பிரதேசங்கள் ஆங்காங்கே காணப்பட்டன. இயற்கையின் தாலாட்டில் எந்நேரமும் தூங்கிக் கிடக்கும் வன்னி மண்ணின் அதிகாலப்பொழுதுகளை எண்ணியதும் கூடவே அம்மாவுடன் பாடசாலைக்குச் சென்ற பருவங்கள் படர்ந்த நினைவுகள் , அவருடன் வாழ்ந்த அனுபவங்கள் சிந்தையில் படம் விரிக்கின்றன.

அவரது உலகமெல்லாம் பாடசாலையும் , குடும்பமும்தாம். அவற்றிலேயே அவர் இன்பமுற்றார். செல்லும் வழியில் அன்று வவுனியா எம்.பி.ஆகவிருந்த தா.சிவசிதம்பரத்தின் வீடிருந்தது. அதற்குப் பக்கத்தில் ஸ்டேசன் 'றோட்டி'ல் இராமச்சந்திரன் டீச்சர் வீடிருந்தது. அவர் ஒரு மொரிஸ் மைனர் கார் வைத்திருந்தார். சில சமயங்களில் அவருடன் அவர் காரில் பாடசாலை செல்வதுண்டு.

சில சமயங்களில் பாடசாலையில் ஏதாவது நிகழ்வுகள் நடக்கும் சந்தர்ப்பங்களில் வீடு திரும்ப நேரமாகிவிடும். நகர் நேரத்துடனேயே இருண்டு விடும். வவுனியா மகாவித்தியாலயத்திலிருந்து குருமண்காடு வரை எம்மை அரவணைத்தபடி ' சிவசிவா' சிவசிவா என்ற முணுமுணுப்புடன் (அவர் தெய்வபக்தி மிக்கவர்)

அழைத்துச் செல்வார். ஆங்காங்கே மாடுகள் சிலவற்றின் அசைபோடும் ஒலிகள் தவிர வேறெதுவுமற்ற நிலையில், 'ஸ்டேசன் றோடு' வழியாக மன்னார் 'றோடே'றிக் குருமண்காட்டுப்பகுதியை வந்து சேர்வோம்.

இன்னுமொரு விடயமும் எனக்கு அடிக்கடி ஞாபகம் வருவதுண்டு. பல்கலைக்கழக நாட்களில் சொல்லாமல் கொள்ளாமல் வீடு திரும்புவேன். அப்பொழுது அராலி வடக்கில் வசித்து வந்த காலம். அம்மா அராலி இந்துக்கல்லூரியில் படிப்பித்துக்கொண்டிருந்தார். எதிர்பாராமல் நான் வந்ததைக்கண்டதும் அவர் அடையும் மகிழ்ச்சியைப்பார்க்க வேண்டுமே.. அங்கிருக்கும் அடுத்த சில தினங்களும் எனக்குப்பிடித்த இட்லி, தோசையென்று ஆக்கிப்போட்டுத் திக்கு முக்காட வைத்து விடுவார். பின்னர் மீண்டும் அதிகாலையொன்றில் காலை யாழ்தேவியை எடுப்பதற்காக மீண்டும் பல்கலைக்கழகம் திரும்புவேன். அன்றும் அதிகாலை நேரத்துடன் எழுந்து வழியில் உண்பதற்காக உணவு வகைகளை ஆக்கிக் கட்டித்தருவார். வீட்டை விட்டு வெளியில் கால் வைக்கும்போது, பின்னால் கலங்கிய கண்களுடன் விடை தரும் அம்மாவின் முகத்தைப் பார்க்க முடியாமல் செல்வேன். எனக்குத்துணையாக பஸ் தரிப்பு வரை போடும் உணவுக்கு நன்றியாக வீட்டை அண்டி வாழும் ஞமலி (நாய்) துணைக்கு வரும். அந்த அதிகாலைக்கருக்கிருளில் தலை விரித்தாடிக்கொண்டிருப்பர் பனைப்பெண்கள். அந்த அதிகாலைகள் இன்னும் பசுமையாக நினைவிலுள்ளன.

அம்மாவின் நினைவு நாள் மீண்டும் அவரைப்பற்றிய பல நினைவுகளை நெஞ்சில சிறகடிக்க வைத்துவிட்டன. அவரது மறைவையொட்டி எழுதிய கவிதையுடன் இப்பதிவினை முடிக்கின்றேன்.

தாயே! தாயே! என்னிருப்பில் உன்னிருப்பறிந்தேன்!
தாயே! என்னிருப்பில் உன்னிருப்பறிந்தேன்!
உன்னிருப்பாலிருப்பின் மறுப்புதனை
உணர்த்தியெங்கு சென்றாய் ? தாயே!
எங்கு சென்றாய் ?
நினைவுக் கோளத்தினொரு
சித்தவிளையாட்டாய்
இருந்து நீ சென்றதெல்லாம்
அன்னையே! என்
எண்ணப் பறவைகளின் வெறும்
சிறகடிப்போ ? இருந்தவிருப்பை
இதுவரை நான் இவ்விதம்
உணர்ந்தேனா ? இருப்புணர்ந்து
புரிவதற்கு உன்னிருப்பேயொரு
காரணியாயமைந்த விந்தையென்னே!
உன்னிழல் தொடர்ந்து வரும்
குஞ்சுகளாய் வருமெமையரவணைத்தாய்.
காத்து நின்றாய்.

உணர்வெல்லாம் காற்றாக நீ போனதினால்
நனவாய்க் கனவாய் வந்து வந்து
மோதும் செயலென்னே!
என்றேனும் உனைப்பற்றி நீ எண்ணியதுண்டா ?
நாம் நன்றாயிருந்தாலது போதுமென
உன்பணிசெய்து கிடந்தாயே ?
தாயே!உனை நாமெங்கினிக் காண்போமோ ?
இங்கு நீ இருந்ததெல்லாம்,
இங்கு நீ நடந்ததெல்லாம்,
இங்கு நாம் திரிந்ததெல்லாம்
இருந்ததொரு இருப்போ ?
விரியும் வினாக்கள் விடைநாடிச்
சிறகடிக்கும் சிட்டுக்களாய்
சித்தவானினிலே.
விடை தெரியா விடைநாடும்
வினாக்கள் பல சுமந்து
ஒட்டகமாயிப் பாலையிலே
காலையும் மாலையுமாய்
பயணமின்னும் தொடருமோ ?
பயணத்தின் ஒளித்தெறிப்பெல்லாம்
கானற் காட்சியாய் கடந்ததுவோ ?
பாலையும் கானலோ ?
இப்பயணமும் கானலோ ?
இங்கு இப் பயணமும்
கானலோ ?
நெஞ்சிலுரமூட்டியெமை வளர்த்தாய் தாயே!
அஞ்சிடாதுளம் தந்தெமை வார்த்தாய்.
நீ இருந்ததெல்லாம் தாயே! வெறும் நிழலா ?
நீ இருந்ததெல்லாம் தாயே! வெறுங் கனவா ?
உன்னிருப்புமென்னிருப்பால் விளைந்ததொரு
பொய்யானதொரு மெய்யோ ? தாயே!
பொய்யானதொரு மெய்யோ ?
உனது சொல்லும் செயலும்
உணர்வும் பரிவும்
பரவிக்கிடக்கும் வெளிக்குள்
வெளியாய் பரவிக் கலந்தாய்.
மீண்டுமொருமுறை
'நான் ' 'ஏன் ' 'யார் ' என
ஆய்ந்திட வைத்துச் சென்றாய் ?
தாயே!
ஆயினுன் உயிரின் உறவின்
உதிரத் துளியாய் இன்னுமிங்கே
இருக்குமென் இருப்பில் நான்

உனைக் கண்டு தெளிவேன். அதனால்
உனைப் புரிந்தேனிந்த
உலகை அறிந்தேன். ஏன்
எனையும் தெரிந்தேன். என்
இருப்பில் இருந்த
உன்
இருப்பின் பொருள் உணர்ந்தேன்.
தாயே! பொருள் கண்டேன்.

## 19. யாழ்ப்பாணத்து முஸ்லீம் மக்கள்....

'ஐபிசி' தொலைக்காட்சியினரின் 'வணக்கம் தாய்நாடு' நிகழ்ச்சியில் வெளியான இலங்கையின் தமிழ்ப்பகுதிகள் மற்றும் ஏனைய பகுதிகள் பற்றிய காணொளிகள் பலவற்றை யு டியூப்பில் காண முடிந்தது. அவற்றிலொன்று யாழ்ப்பாணத்துச் சந்திகள் பற்றிய காணொளி. அதில் வரும் சில சந்திகள் நெஞ்சினில் பழைய நினைவுகள் பலவற்றைக் கிளறி விட்டன. சில காட்சிகள் கூடவே துயரையும் ஏற்படுத்தின. அதிலொரு சந்தி ஐந்து சந்தி. யாழ்ப்பாணத்து முஸ்லீம் மக்கள் அதிகமாக வாழ்ந்த பகுதி. இந்தச்சந்தியென்றதும் உடனே ஞாபகத்துக்கு வரும் விடயம் இதன் அருகில் அமைந்திருந்த பிளவுஸ் உணவகம்தான். 'வீச்சு ரொட்டி', 'ரோஸ்ட்' இவைதாம் பிளவுஸில் எமக்குப் பிடித்த உணவு வகைகள். பின்னர் வளர்ந்ததும் எமக்குப் பிடித்த உணவகமாக கலீபா அக்பர் வீதியில் அமைந்திருந்த மொக்கங் கபே மாறியது. மொக்கங் கபே புகழ்பெற்றது அதன் கொத்து ரொட்டிக்காக. நான் முதன் முதலாகக் கொத்து ரொட்டி சாப்பிட்டது மொக்கங் கபேயில்தான்.

மொக்கங் கபே யாழ்ப்பாணத்தவர் வாயில் மொக்கன் கடையாக மாறிற்று. பலருக்கு இந்த விடயம் இன்னும் தெரியாது. இந்நிகழ்ச்சியை நடாத்திக்கொண்டிருந்த பெண்ணும் மொக்கன் கடை என்றே குறிப்பிட்டிருந்தார். நானும் ஆரம்பத்தில் மொக்கன் கடை என்றே கேள்விப்பட்டு நண்பர்களுடன் சென்றிருந்தேன். ஆனால் அதன் காரணமாகவே நான் சென்றிருந்தபொழுது கடையின் பெயரை உன்னிப்பாகக் கவனித்திருந்தேன். அப்பொழுதுதான் கடையின் பெயர் மொக்கன் கடை அல்ல மொக்கங் கடை என்பது புரிந்தது. மேலும் நிகழ்ச்சியை நடாத்திக்கொண்டிருந்த பெண் மொக்கன் கடை ரோஸ்ட்டுக்குப் பெயர் பெற்றதென்றார். மொக்கங் கடை புகழ்பெற்றது ரோஸ்ட்டுக்க அல்ல கொத்து ரொட்டிக்கு என்பதே என் அனுபவம்.

'டொராண்டோ', கனடாவில் கூட தொண்ணூறுகளின் ஆரம்பத்தில் முஸ்லீம் சமூகத்தைச் சேர்ந்த ஒருவர் 'மொக்கன் கடை' என்றே பெயரை வைத்து உணவகத்தினைத் திறந்திருந்தார். அவரிடம் கேட்டபொழுது யாழ்ப்பாணம் மொக்கன் கடை ஞாபகமாகவே அப்பெயரை வைத்ததாகக் குறிப்பிட்டார். அப்பொழுது அவரிடம் நான் கூறினேன் அது மொக்கன் கடை அல்ல; மொக்கங் கடை என்று. அவர் ஆச்சரியப்பட்டார்.

காணொளியில் காட்டிய இன்னுமொரு விடயம் பழைய ஞாபகங்களுடன், நெஞ்சில் வலியினையும் ஏற்படுத்தியது. அது முஸ்லீம் மக்கள் வாழ்ந்த பிரதேசமென்று வெறுமையாகப் பாழடைந்து காணப்பட்ட யாழிலிருந்து வெளியேறிய முஸ்லீம் மக்களின் வீடுகள்.. அவை இன்னும் அப்படியே வெறுமையாகக் கிடக்கின்றன. எனக்கு இன்னும் விளங்காத விடயம்.. இன்று யுத்தம் முடிந்து எட்டு ஆண்டுகளாகி விட்டன. எதற்காக அவ்வீடுகளுக்குச் சொந்தக்காரர்களான முஸ்லீம் மக்கள் இன்னும் மீண்டும் திரும்பவில்லை.

ஒருவேளை அன்று சென்ற முஸ்லீம் மக்களின் வளர்ந்து இளையவர்களாகவிருக்கும் அடுத்த தலைமுறையினர் புதிய இடத்தில் காலூன்றி , மீண்டும் வரவிரும்பாமல் (காணொளியில் நிகழ்ச்சியை நடாத்தும் பெண்களிலொருவர் கூறுவது போல்) இருந்தாலும் அவ்வீடுகள் அம்மக்களுக்குச் சொந்தமானவை. அவற்றை அவர்கள் வேறு யாருக்காவது விற்றுப் பணம் பெறலாமே. எதற்காக மீண்டும் திரும்பி வராமலும், அவற்றை விற்காமல் பாழடைய விட்டுமிருக்கின்றார்கள். அல்லது அவர்கள் மீண்டும் திரும்பி வருவதை யாராவது அரசியல் மட்டத்தில் தடுக்கின்றார்களா?
முஸ்லீம் மக்கள் ஏனைய யாழ்ப்பாணத்து மக்களுடன் இணைந்து , இன்பமாக வாழ்ந்த அக்காலம் நினைவுக்கு வருகின்றது. முஸ்லீம் மக்கள் என்றதும் உடனே ஞாபகத்துக்கு வரும் நினைவுகளிலொன்று... என் பால்ய காலத்து நண்பர் ஒருவரின் மூத்த அண்ணரைச் சுற்றி எப்பொழுதும் நண்பர்கள் பலர் இருப்பார்கள். அவர்களில் பலர் முஸ்லீம் மாணவர்கள். பெயர்கள் சில இன்னும் நினைவிலுள்ளன. இவர்கள் எல்லோரும் யாழ் இந்துக்கல்லூரி மாணவர்கள். யாழ்ப்பாணத்து முஸ்லீம் மக்கள் அதிகமாகக்கல்வி பயின்ற இடமாக யாழ் இந்துக் கல்லூரியையும், யாழ் இந்து மகளிர் கல்லூரியையும் கூறலாம்.

யாழ் இந்து மகளிர் கல்லூரியில் படித்த என் உறவுக்காரச் சகோதரி ஒருவருக்கு சிநேகிதிகளில் பலர் முஸ்லீம் இனத்தைச் சேர்ந்தவர்கள். ஒரு முறை பெரிதாக நடைபெற்ற அவரது சிநேகிதி ஒருவரின் திருமணத்துக்குக் கூடச் சிறுவனாகச் சென்றிருக்கின்றேன். இன்னும் ஞாபகத்திலுள்ளது. அவ்வளவுக்கு அன்று யாழ்ப்பாணத்தில் முஸ்லீம் மக்கள் சகல பிரிவு மக்களுடனும் இணைந்து வாழ்ந்து வந்தார்கள். இன்று வெறுமையாகக்கிடந்த அந்தப் பகுதி பழைய நினைவுகள் சிலவற்றைக் கிளறி விட்டது. அனைத்து மக்கள் வாழ்விலும் என்றுதான் இயல்பு நிலை திரும்புமோ?

## 20. யாழ் இந்துக் கல்லூரி நினைவுகள்: மறக்க முடியாத 'காப்டன்' சந்தியாப்பிள்ளை மாஸ்ட்டர்!

நேற்று மரியதாஸ் மாஸ்ட்டர் மற்றும் சுந்தரதாஸ் மாஸ்ட்டர் பற்றிய குறிப்பொன்றினயிட்டிருந்தேன். அதற்கு எதிர்வினையாற்றியிருந்த 'மூதறிஞர் ஊடகம்' "நடுவில் இருக்கும் சந்தியைப் பற்றி கொஞ்சம் வில்லுப்பாட்டு பாடுங்கோ தம்பியவை" என்று கூறியிருந்தார். அவர் சந்தியாப்பிள்ளை மாஸ்ட்டரைப்பற்றிக் கூறுகின்றாரென்று எண்ணுகின்றேன். அவரைப்பற்றி ஏற்கனவே சில பதிவுகள் பல வருடங்களுக்கு முன் இட்டிருந்தேன். மீண்டுமொரு குறிப்பு இதோ:

சந்தியாப்பிள்ளை 'மாஸ்ட்டரிடம்' ஒன்பதாவது வகுப்பில் தமிழ் படித்திருக்கின்றேன். இவர் தமிழ் ஆசிரியரல்லர். மாணவர்களுக்குக் Cadet பயிற்சி கொடுத்தல், விளையாட்டு இவைதாம் இவரது பிரதானமான துறைகள்.

இவரைப்பற்றி ஊடகவியலாளர் எஸ்.கே.ராஜன் அவர்கள் இப்பதிவுக்கான எதிர்வினையில் பின்வருமாறு கூறியுள்ளார்:

"Captain சந்தியாப்பிள்ளை மாஸ்டர் அவர்கள். Ceylon Cadet Corpsல் பயிற்றுனராக விளங்கினார். Lieutenant ஆக பதவி உயர்வு பெற்றார். பின்னர் Captain ஆனார். ஓரிரு ஆண்டுகள் இராணுவ தலைமையகத்திலும் பணியாற்றியிருந்தார். இராணுவ சீருடையோடு Captain சந்தியாப்பிள்ளை மாஸ்டர் அவர்கள் சிறப்பான கம்பீர நடை நடந்து வருவார். அந்த நாள் நினைவுகள். மாணவர்களை எப்பொழுதும் நண்பர்கள் போன்றே கருதும் ஓர் நல்லாசான்."

பாடத்தைச் சுவையாகப் படிப்பிப்பதற்காக அவர் அவ்வப்போது சில குட்டிக்கதைகளைக் கூறுவதுண்டு. சில கதைகள் மாணவர்களின் வயதுக்கு மீறியவையாகவும் இருப்பதுண்டு. ஆனால் ஒரு போதுமே அவற்றை அவர் விரசமாகக் கூறுவதில்லை. வேடிக்கையை மையமாக வைத்தே அவற்றைக் கூறுவார். உதாரணமாக 'மருத்துவக் கல்லூரிக்குச் சென்ற கிராமத்தான்', 'அச்சகத்துக்குச் சென்றவரின் அனுபவம்' போன்ற குட்டிக்கதைகளை அவர் கூறியிருக்கின்றார். இவை அவர் கூறிய குட்டிக்கதைகளுக்கு நான் வைத்த தலைப்புகள்.

ஆனால் சந்தியாப்பிள்ளை 'மாஸ்ட்டர்; என்றதும் எனக்கு முதலில் ஞாபகம் வருவது இவை அல்ல. இன்னுமொரு விடயம். அது: எங்களது வகுப்பு குமாரசாமி மண்டபத்துக்கு , கே.கே.எஸ்.வீதியிலிருந்து வரும் வீதியின் வடக்குபக்கத்திலிருந்தது. எங்கள் வகுப்பு யன்னல் வழியாக அவ்வீதியையும், அங்கு நடப்பவற்றையும் காணலாம். அவ்வப்போது அவ்வழியால் இறந்தவர்கள் சிலரது இறுதி ஊர்வலங்கள் செல்வதுண்டு. அவ்விதமான சந்தர்ப்பங்களில் சந்தியாப்பிள்ளை 'மாஸ்ட்டர்' மாணவர்கள் அனைவரையும் எழுந்து நிற்கச்

சொல்லி, அவ்வழியால் இறுதி யாத்திரை செல்லும் அந்த மனிதருக்கு அஞ்சலி செய்ய வைப்பார். ஒருவரின் அந்திம யாத்திரைக்குச் சந்தியாப்பிள்ளை 'மாஸ்ட்டர்' காட்டிய அந்த மானுட நேயப்பண்பு எனக்கு அவ்வயதில் ஆச்சரியத்தை மூட்டியது; இன்றும்தான். இந்த அவரது பண்பு என்னால் மறக்க முடியாத ஆசிரியர்களிலொருவராக சந்தியாப்பிள்ளை மாஸ்ட்டரையும் ஆக்கிவிட்டதென்பேன்.

இவரைக்காணும் சமயங்களிலெல்லாம் எனக்குத்தோன்றும் எண்ணம் "இந்த வயதிலும் அன்றிருந்தமாதிரியே அப்படியே இருக்கிறாரே. எப்படி?" என்பதுதான். எம்ஜிஆரைப்போல் தனது 'இமேஜ்' மீது மிகுந்த கவனமெடுக்கும் சந்தியாப்பிள்ளை மாஸ்ட்டர் அதே திடகாத்திரமான உடற்கட்டுடன் இன்றும் காண்பதற்குக் காரணம் இன்றுவரை அவர் கைக்கொண்டுவரும் ஒழுங்கான, கிரமமான உடற்பயிற்சியாகவிருக்கக் கூடும்.

*எம் ஆசிரியர்கள் எல்லோரும் எங்களது பால்ய, பதின்ம பருவங்களுடன் பின்னிப் பிணைந்தவர்கள். அவ்வகையில் முக்கியமானவர்கள். அழியாத கோலங்களாக நிலைத்து நிற்பவர்கள்.

## 21. கராட்டி வீரர் கிஷோர் குமார்!

தற்செயலாக இந்தப்பத்திரிகைச் செய்தி கண்ணில் பட்டது. இதில் குறிப்பிடப்பட்டுள்ள கிஷோர்குமார் குணரட்னம் என்னுடன் யாழ் இந்துக் கல்லூரியில் உயர்தரம் படித்தவர். பின்னர் சென்னை கிறிஸ்டியன் கல்லூரியில் கற்றவர். கராட்டி, குத்துச்சண்டை ஆகியவற்றில் விருதுகள் பெற்றவர். தற்போது ஆஸ்திரேலியாவில் வசிப்பதாக அறிகின்றேன். இவர் இந்தியாவில் வசித்த சமயம் மலையாளப் பட நடிகர்களுக்குக் கராட்டி கற்பித்ததாக நண்பர்கள் சிலர் கூறினார்கள். உண்மை , பொய் தெரியவில்லை.

இச்செய்தியில் அவர் குத்துச்சண்டைப் போட்டியில் வெற்றி பெற்ற விபரங்களுள்ளன. இவரது  தந்தையார் இவரது அம்மாவைச் சைக்கிளில் வைத்து கே.கே.எஸ் வீதி வழியாக அழைத்துச் செல்லும் காட்சி இன்னும் மனக்கண்ணில் தெரிகின்றது.

இவர் சென்னையில் படித்துக்கொண்டிருக்கும் சமயம் ஒரு முறை கொழும்பு வந்திருக்கையில் சந்தித்திருக்கின்றேன். அதுவே கடைசியாக இவரைச் சந்தித்தது. 78/79 காலகட்டமென்று நினைவு.

ஆனைக்கோட்டையிலுள்ள இவரது வீட்டுக்கு நண்பர்கள் அநபாயன், சிவகுமாருடன்  பல தடவைகள் சென்றிருக்கின்றேன். யாழ்ப்பாணம் முழுவதும் நாங்கள் அலைந்து திரிந்த நினைவுகள் இன்னும் பசுமையாகவுள்ளன.

ஒருமுறை நான், அநபாயன் மற்றும் இவர் கீரிமலைக்குச் சைக்கிளில் சென்றிருந்தோம். நான் கேணியில் குளிக்காமல் இவர்கள் குளிப்பதை விடுப்புப் பார்த்துக்கொண்டிருந்தேன். இருவரும் மெல்ல என்னுடன் கதைப்பதுபோல் வந்து ஒரே கட்டாகத்தூக்கி கேணிக்குள் போட்டுவிட்டார்கள். பிறகென்ன போட்டிருந்த உடுப்புகளைக் காயப்போட்டு ஆறுதலாக வீடு திரும்பினோம்.

இச்செய்தியை வாசித்ததும் மேற்படி நினைவுகள் நினைவுப் புற்றுகளிலிருந்து மேலெழுந்து படம் விரித்தாடின.

## 22. வேந்தனார் இளஞ்சேய்!

இளஞ்சேய் (வேந்தனார் இளஞ்சேய்) இவர் என் மாணவப்பருவத்து நண்பர்களிலொருவர்.  வவுனியா மகா வித்தியாலயத்தில் எழாம் வகுப்பை முடித்துக்கொண்டு , எட்டாம் வகுப்பிலிருந்து என் கல்வி யாழ் இந்துக் கல்லூரியில் ஆரம்பமாகியது. 8G தான் என் வகுப்பு. அவ்வகுப்பில் என்னுடன் சக மாணவராக அறிமுகமானவர்தான் இளஞ்சேய். இலங்கையின் புகழ்மிக்க எழுத்தாளர்களிலொருவரான வேந்தனார் அவர்களின் இளைய புதல்வன். மிகவும் சிறந்த பேச்சாளராக எம் வகுப்பில் அக்காலகட்டத்தில் விளங்கியவர். இளஞ்சேயிடமிருந்து அண்மையில் எனக்கொரு மின்னஞ்சல் வந்திருந்தது. இலண்டனில் எழுத்தாளர் முல்லை அமுதனிடமிருந்து என் மின்னஞ்சலைப்பெற்றுக் கடிதம் அனுப்பியிருந்தார். அவரது தந்தையார் அமரர் வேந்தனாரின் நூறாவது பிறந்ததினத்தையொட்டிப் 'பதிவுகள்' இணைய இதழில் பிரசுரிப்பதற்காகக் கட்டுரையொன்றினையும் அனுப்பியிருந்தார்.

இளஞ்சேயின் கடிதமும், மீள் தொடர்பும் மாணவப்பருவத்து நினைவுகளை மீண்டும் சிந்தையிலெழ வைத்துவிட்டன. யாழ் இந்துக்கல்லூரியில் படித்துக்கொண்டிருந்த சமயம் என் நல்ல நண்பர்களிலொருவராக விளங்கினார். நாமிருவருமே வாசிப்பதில் ஈடுபாடுள்ளவராக இருந்ததும் முக்கிய காரணங்களிலொன்று. அக்காலகட்டத்திலேயே இவர் தன்னுடைய தந்தையாரை இழந்து விட்டிருந்தார். இவரது வீடு யாழ் இந்து மகளிரி கல்லூரிக்கு அண்மையிலிருந்தது. நான் இவரிடமிருந்து வாசிப்பதற்காகக் கதைப்புத்தகங்கள் வாங்குவதற்காக அடிக்கடி இவரது வீட்டுக்குச் சென்றிருக்கின்றேன். இவரும் அவ்வப்போது என்னிடம் புத்தகங்கள் இரவல் வாங்கிச்செல்வதற்காக வருவார்.

அக்காலகட்டத்தில்தான் பேராதனைப்பல்கலைக்கழகத்தில் முதுகலையில் பட்டம் பெற்றிருந்த இவரது மூத்த அக்கா கலையரசி அவர்களின் திருமணம் நல்லூர் ஆலயத்துக்கருகிலிருந்த ஆலயமொன்றில் நடைபெற்றது. மணமகனும் பேராதனைப்பல்கலைக்கழகப்பட்டதாரியே. அத்திருமணத்துக்காக எம் வகுப்பு மாணவர்கள் பலர் இணைந்து சென்றிருந்தோம். இன்னும் பசுமையாக ஞாபகத்திலுள்ளது.

பின்னர் காலப்போக்கில் திசை மாறிச்சென்று விட்டோம். இவரைக் கடைசியாகச் சந்தித்தது கொழும்பில் பயணித்துக்கொண்டிருந்த இ.போ.ச பஸ்ஸொன்றில். 1978- 1981ற்குட்பட்ட காலகட்டத்திலொரு நாளென்று ஞாபகம். அப்பொழுது இவர் கணக்கியல் துறையில் படித்துக்கொண்டிருந்தார். பின்னர் நாட்டு நிலை காரணமாக நான் நாட்டை விட்டு வெளியேறி விட்டேன். இவரும் பின்னர் இங்கிலாந்து சென்று விட்டதாக அறிந்திருந்தேன். ஆனால் தொடர்புகளிருக்கவில்லை. பல வருடங்களின் முன்னர் டொராண்டோ, கனடாவில் அமரர் வேந்தனாரின் நூல்கள் வெளியிடப்பட்டபோது அந்நூல்களிலொன்றில் இவரது பெயரைப் பார்த்திருந்தேன்.

பேச்சாற்றலைப்போல் எழுத்தாற்றலும் உள்ளவர் இளஞ்சேய். அனுப்பியிருந்த மின்னஞ்சலில் தான் அவ்வப்போது கவிதைகள் எழுதுவதாக அவர் குறிப்பிட்டிருந்தார். கணக்காளராகவும் பணியாற்றுவதாகவும் அறியத்தந்திருந்தார். எழுத்தாற்றல், வாசிப்பாற்றல் மிகுந்த இளஞ்சேய் அதிகமாக எழுத வேண்டும். இதுவரை அதிகம் எழுதியிருக்காவிட்டாலும் , இனியாவது அதிகம் எழுத வேண்டும். செய்வாரா?

இத்தனை வருடங்களின் பின்னர் அண்மையில்தான் இவருடன் மீள்தொடர்பு இவரது மின்னஞ்சல் மூலம் ஏற்பட்டது. அனுப்பியிருந்த புகைப்படத்தில் மிகவும் இளமையுடன் காணப்பட்டார்.  நன்றி இளஞ்சேய்.

இணையம் இன்று மக்கள் வாழ்வில் தவிர்க்கமுடியாத அம்சங்களிலொன்று. ஆரோக்கியமான அம்சமது. மாணவப்பருவத்து நண்பரான இளஞ்சேயை மீண்டும் நான் தொடர்புகொள்ளக் காரணமாக அமைந்த ஊடகமல்லவா அது.

எனக்குப்பிடித்த கவிஞர் வேந்தனாரின் கவிதைகளிரண்டு:

**1.** காலைத் தூக்கிக் கண்ணில் ஒற்றிக் கட்டிக் கொஞ்சும் அம்மா

காலைத் தூக்கிக் கண்ணில் ஒற்றிக்
கட்டிக் கொஞ்சும் அம்மா
பாலைக் காய்ச்சிச் சீனி போட்டுப்
பருகத் தந்த அம்மா.
புழுதி துடைத்து நீரும் ஆட்டிப்
பூவுஞ் சூட்டும் அம்மா
அழுது விழுந்த போதும் என்னை
அணைத்துத் தாங்கும் அம்மா.
அள்ளிப் பொருளைக் கொட்டிச் சிந்தி
அழிவு செய்த போதும்
பிள்ளைக் குணத்தில் செய்தான் என்று
பொறுத்துக் கொள்ளும் அம்மா.
பள்ளிக் கூடம் விட்ட நேரம்
பாதி வழிக்கு வந்த
துள்ளிக் குதிக்கும் என்னைத் தூக்கி
தோளிற் போடும் அம்மா.
பாப்பா மலர்ப் பாட்டை நானும்
பாடி ஆடும் போது
வாப்பா இங்கே வாடா என்று
வாரித் தூக்கும் அம்மா.

**2. 'கவிஞன்' என்னும் கவிதையிலிருந்து..**

பாடுகின்றோர் எல்லோருங் கவிஞ ரல்லர்
பாட்டென்றாற் பண்டிதர்க்கே உரிமை யல்ல
ஓடுகின்ற பெருவெள்ளப் பெருக்கே போல
உணர்ச்சியிலே ஊற்றெழுந்த ஒளியால் ஓங்கி
வாடுகின்ற மக்களினம் மாட்சி கொள்ள
மறுமலர்ச்சிப் பெருவாழ்வை வழங்கு மாற்றல்
கூடுகின்ற கொள்கையினால் எழுச்சி கொண்டு
குமுறுகின்ற கோளரியே கவிஞ னாவான்

## 23 யாழ் இந்து நினைவுகள்: மறக்க முடியாத புண்ணியலிங்கம் மாஸ்ட்டரும், குழந்தைத்தனம் மிக்க சோமசேகசுந்தரம் மாஸ்ட்டர்.

### மறக்க முடியாத புண்ணியலிங்கம் மாஸ்ட்டர்

யாழ் இந்துக் கல்லூரி என்றதும் எனக்கு நினைவில் வரும் ஆசிரியர்களிலொருவர் புண்ணியலிங்கம் 'மாஸ்டர்'. இணுவில் பக்கமிருந்து வந்தவரென்று ஞாபகம். உயரமான ஆகிருதி. சிரித்த முகமும், சந்தனப்பொட்டுமாகக் காட்சியளிப்பார். சைக்கிளில் வருவார்.

புண்ணியலிங்கம் மாஸ்ட்டர் எங்களுக்கு ஒன்பதாம் வகுப்பில் பெளதிகவியல் பாடம் எடுத்தவர். அந்த ஒரு வருடம்தான் அவரிடம் நான் பாடம் எடுத்திருக்கின்றேன். ஆனால் அவர் மறக்க முடியாத ஆசிரியர்களிலொருவராக என் நினைவில் பதிந்து விட்டதற்குக் காரணம் அவர் பாடங்களை மாணவர்களுக்குக் கற்பிக்கும் முறைதான். அவர் கற்பிக்கும்போது கற்பிக்கும் விடயங்களை நடைமுறையில் செய்து காட்டிக் கற்பிப்பதில் விருப்பமுள்ளவர். ஒருமுறை 'டைனமோ' எவ்விதம் வேலை செய்கிறதென்று காட்டுவதற்குத் தனது சைக்கிளை வகுப்பறைக்குக் கொண்டுவந்து 'டைனமோ' எவ்விதம் வேலை செய்கிறது என்பதைச் செய்து காட்டினார். சைக்கிள் டைனமோ எவ்விதம் சில்லின் இயக்கச் சகதியை மின்சாரமாக மாற்றி, சைக்கிளுக்கு ஒளியை வழங்குகிறது என்பதை விளங்கப்படுத்தினார்.

அவ்விதமாக அவர் விளங்கப்படுத்திக் கொண்டிருந்தபோது அப்போது அதிபராகவிருந்த சபாலிங்கம் கல்லூரித் தாழ்வாரம் வழியாக வந்து விட்டார். வந்தவர் புண்ணியலிங்கம் மாஸ்ட்டர் வகுப்புக்குள் சைக்கிளை வைத்துப் படிப்பித்துக்கொண்டிருப்பதைக் கண்டுபிடித்து விட்டார். உடனே மாணவர்களுக்கு முன், புண்ணியமூர்த்தி மாஸ்ட்டரை அழைத்து, அவ்விதம் பாடம் நடத்துவதைக் கண்டித்து விட்டுச் சென்றார். மாணவர்களான எங்களுக்கு ஆசிரியரை நினைக்கச் சிறிது பாவமாகிவிட்டது. புண்ணியலிங்கம் மாஸ்டரோ நடந்ததை நாங்கள் பார்த்துவிட்டதை அறிந்துகொண்டாலும், பாடத்தைத் தொடர்ந்து படிப்பித்துவிட்டுச் சைக்கிளை எடுத்துச் சென்றார்.

மாணவர்களுக்குக் கற்பிக்கும் விடயம் நன்கு புரியவேண்டுமென்பதற்காக, தனது சைக்கிளைக் கொண்டுவந்து பாடம் நடத்திய ஆசிரியர் கற்பித்தலில் தனித்துவம் மிக்க ஆசிரியர்களிலொருவராக என் நினைவில் பதிந்து விட்டார்.

### குழந்தைத்தனம் மிக்க சோமசேகசுந்தரம் மாஸ்ட்டர்.

இவரிடம் நான் படித்தது கல்விப்பொதுத்தராதர உயர்தரத்தில்தான். எமக்குப்

பிரயோக கணிதம் படிப்பித்துக்கொண்டிருந்தார். இவரைப்பற்றி நினைத்தால் முதலில் நினைவுக்கு வருவது இவரது முகத்தில் தெரியும் எம்மையெல்லாம் தோழமையுடன் நோக்கும் சிரிப்பும், மாணவர்களுடன் நண்பர்களைப்போல் அணுகும் பண்பும்தாம். மாணவர்கள் இவரைச் சுற்றி இவர் உணர்ச்சி ததும்ப உரையாடுவதைக் கேட்டுக்கொண்டிருப்போம். இவரும் தன்னைப்பாதிக்கும் விடயங்களை மனமொன்றி, உணர்ச்சி மிகுந்து விபரிப்பார்.

பாடத்தில் கேட்கும் எந்தக் கேள்வியையும் உடனேயே எடுத்து, கரும்பலகை முழுவதும் எழுதித் தீர்த்து , நிறுவும் வரையில் இவர் ஓய மாட்டார். கண்டிப்புடன் மாணவர்களை சிறிது எட்ட வைத்துப் பழகும் ஆசிரியர்களுக்கு மத்தியில், அரவணைத்து அன்புடன், தோழமையுடன் பழகும் விதத்தில் இவர் தனித்தன்மையுடன் விளங்கினார். அவ்விதமே எம் நினைவுகளிலும் பதிந்துவிட்டார்.

சோமசேகரசுந்தரம் மாஸ்ட்டரை எண்ணியதும் இவரது பட்டப்பெயரும் கூடவே நினைவுக்கு வந்து விடுவதைத்தவிர்க்க முடியவில்லை. ஆனால் அதனை இங்கு கூறுவதைத் தவிர்த்துக்கொள்கின்றேன். ஆனால் அவர் இவ்விதம் தன்னைப்பற்றிக் கூறுவதைத் தவிர்ப்பதில்லை. வேடிக்கையாகத் தன்னைப்பற்றிய பட்டப்பெயரை அவரே கூறியதைச் சில தடவைகள் கேட்டிருக்கின்றேன்.

யாரிடமாவது இவர்களின் தெளிவான புகைப்படங்கள் இருந்தால் பகிர்ந்துகொள்ளவும்.

## 24. நல்லூர்த்திருவிழா நினைவுகள்: உள்ளம் உருகுதையா?

எனது மாணவப்பருவத்தில் நான் பக்திப்பழமாக இருந்திருக்கின்றேன். என் ஒன்பதாவது வகுப்பு வரையில் வருடா வருடம் நண்பர்களுடன், உறவினர்களுடன் மற்றும் குடும்பத்தவருடன் நல்லூர் திருவிழாவுக்குச் சென்றிருக்கின்றேன். யாழ் இந்துக்கல்லூரியில் மாணவனாக இருந்த சமயம், எட்டாம் வகுப்பிலிருந்து பத்தாவது வகுப்பு வரையிலான காலகட்டத்தில், யாழ் சாந்தையர் மடப்பிள்ளையார் கோயில் நிர்வாகத்தினரால் வருடா வருடம் சிவராத்திரியையொட்டி நடாத்தும் சமயக்கட்டுரைப் போட்டிகளில் கலந்துகொண்டு பரிசுகள் பெற்றிருக்கின்றேன்.

அக்காலகட்டத்தில் நல்லுர்த்திருவிழாக்காலத்தில் நண்பர்களுடன் செல்லும்போது அந்த வயதுக்குரிய குறும்புத்தனங்கள் செய்வதுண்டு. அக்காலகட்டத்து அழியாத கோலங்கள் நிறையவே உள்ளன. நல்லூர்த் திருவிழாவையொட்டி ஆலயத்தின் அருகாக அமைந்துள்ள கடைகளில் வளையல்கள், உணவு வகைகள் , பல்வகையான விளையாட்டுச்சாமான்கள் என்று நிறைதிருக்கும். அங்கு எங்கள் மத்தியில் மிகவும் புகழ்பெற்ற ஒரு விடயமென்னவென்றால்.. 'டிக்கி டிக்கி'தான். அது ஒரு சிறிய வண்டு வடிவில தகரத்தில் அமைந்த 'டிக்கி டிக்கி' என்று ஒலியெழுப்பும் விளையாட்டுப்பொருள்.

அதனை நண்பர்கள் அனைவரும் அவ்வயதில் எம் உள்ளம் கவர்ந்த கள்வர்கள் அருகாக அன்னநடை நடந்து செல்கையில் அடிக்கடி பாவித்து ஒலியெழுப்பிக் கொண்டிருப்போம். அவர்களும் பதிலுக்கு ஓரக்கண்களால் ஒயிலாகப்பார்த்து, புன்னகைத்து மறுகணமே முறைத்துச்செல்வார்கள்.

நல்லூர்த்திருவிழா என்றதும் உடனடியாக ஞாபகத்துக்கு வரும் வேறு விடயங்களாகக் கந்தர்மடத்தண்ணீர்ப்பந்தல், ஆனைப்பந்தியடி அன்னதானம், வீர்மாகாளியம்மன் ஆலயத்து பூசாரி அனைவருக்கும் குழைத்து வழங்கும் பஞ்சாமிர்தம் ஆகியவற்றைக்குறிப்பிடலாம். கந்தர்மடத்தண்ணீர்ப்பந்தலில் சர்க்கரைத்தண்ணீர் குடிப்பதிலோர் இன்பமில்லாமலில்லை.

கந்தர்மடத்தண்ணீர்ப்பந்தலென்றதும் உடனடியாக ஞாபகத்தில் வருமின்னுமொரு விடயம்: டி.எம்.எஸ்ஸுன் இளங்குரலில் ஒலிக்கும் முருகனைப்பற்றிய பக்திப்பாடல்கள். 'முருகா என்றழைக்கவா. முத்துக்குமரா என்றழைக்கவா', 'உள்ளம் உருகுதையா' , 'அழகென்ற பெயருக்கு முருகா' போன்ற பாடல்களை எப்பொழுதும் தண்ணீர்ப்பந்தல்களில் ஒலிபரப்பிக் கொண்டிருப்பார்கள். இப்பாடல்களை இப்பொழுதும் கேட்கையில் உடனடியாக மனமொருமுறை அந்தப்பருவத்துக்கே சென்று விடுவது வழக்கம்.

அப்பருவத்தில் முதல் முறையாகச் சமயம் பற்றிய கேள்வியை எழுப்பக்காரணமாக இருந்தவையாக தி.மு.க.வினரின் நூல்களைக்குறிப்பிடலாம், குறிப்பாக அறிஞர் அண்ணாவின் தர்க்கரீதியாக புராணங்களில் கூறப்படும்

கதைகளிலுள்ள ஓரவஞ்சனைமிக்க சம்பவங்கள், மூட நம்பிக்கைகள் போன்றவற்றை வெளிப்படுத்தும் நூல்கள் இளம் வயதில் கேள்விகளை எழுப்பின. பின்னர் மார்க்சிய நூல்கள், கார்க்கியின் நூல்கள், லெனின், எங்கெல்ஸின் நூல்கள், மற்றும் பல்வகை அறிவியல் நூல்கள் சிந்தையை மேலும் விரிவாக்கின.

நான் கடைசியாகச் சாமி கும்பிடவென்று நல்லூருக்குச்சென்றது எனது ஒன்பதாவது வகுப்பில்தான். அதன்பிறகு இதுவரையில் கோயில்களுக்குச் சாமி கும்பிடவென்று சென்றதில்லை. ஆனால் நண்பர்களுடன் பல தடவைகள் பொழுதுபோக்குக்காகச் சென்றதுண்டு. என் பால்யகாலத்து நண்பர்களிலொருவரான அநபாயன் பேராதனையில் விஞ்ஞானபீட மாணவனாக இருந்த சமயத்தில் அங்குள்ள குறிஞ்சிக்குமரன் ஆலயத்துக்குச் சென்றதுண்டு.

மொறட்டுவைப்பல்கலைக்கழகத்தில் படித்துக்கொண்டிருந்த காலகட்டத்தில் கொச்சிக்கடை பொன்னம்பலவாணேசுவரர் ஆலயத்துக்குச் சிவராத்திரி தினங்களில் சென்றதுண்டு.

இன்று என்னைப்பொறுத்தவரையில் நான் சமயங்களை, புராணங்களை நம்புவதில்லை. ஆனால் அறிவியல்ரீதியில் இருப்பினைப்புரிந்து கொள்ளும் ஒருவனாகவே இருக்கின்றேன். முப்பரிமாண உலகினுள் வளைய வரும் இருப்பு எம்முடையது. இவ்விதமான இருப்பொன்றுக்குள் வளைய வரும் எம்மால் எம் பரிமாணங்களை மீறி உணரவே முடியாது. ஊகிக்கத்தான் முடியும். உண்மையில் நாம் அனைவருமே, இவ்வுலகில் வாழும் அனைத்துமே நாமிருக்குமிந்த முப்பரிமாண இடவெளியின் கைதிகளே. இச்சிறையினுள் எனக்கு இன்பமூட்டுபவை வாசிப்பும் , நூல்களுமே (அறிவியல் நூல்கள் உட்பட). அறிவியல் துறையின் பல்துறைகளிலும் தாம் வாழ்ந்த சூழலை மீறிச்சிந்தித்த அறிவியல் அறிஞர்களின் (மார்க்ஸ், சார்ள்ஸ் டார்வின், சிக்மண்ட் பிராய்ட், மற்றும் ஐன்ஸ்டைன் போன்ற) சிந்தனைகள், நூல்களை வாசிப்பதிலுள்ள இன்பமே தனிதான். அந்தவின்பம் இருப்பு பற்றிய தெளிவினை இன்னும் அதிகரிப்பதால் வருமின்பமே. அறிவியலே என் சமயம். அறிவியல் அறிஞர்களே என் குருக்கள் என்பேன்.

## 25. மறக்க முடியாத ஆளுமையாளர் சத்தியமூர்த்தி மாஸ்டர்.

அராலி வடக்கில் வசித்த காலத்தில் எம் குடும்பத்துடன் நன்கு பழகியவர்களில் ஒருவர். ஆசிரியையான அம்மா மீது மிகுந்த மதிப்பையும், அன்பையும் வைத்திருந்தவர் இவர்.

ஆரம்பத்தில் கட்டுப்பெத்த தொழில் நுட்பக் கல்லூரியில் பொறியியல் கற்றவர். அதன் பின் அமெரிக்கா சென்று பட்டப்படிப்பை முடித்தவர். இவ்விதமே நான் அறிந்திருக்கின்றேன். ஊர் திரும்பியவர் ஆசிரியத் தொழிலை விரும்பி ஏற்று அதனையே தன் வாழ்க்கைத்தொழிலாகத் தொடர்ந்தார். சக மானுடர் மீது பேரன்பு கொண்டவர். அனைவரினதும் அன்பினையும் பெற்றவர்.

எனக்கு இவரைப்பற்றி நினைத்ததும் முதலில் நினைவுக்கு வருவது 1977 ஆம் ஆண்டின் நவம்பர் 30. அன்று ஸ்ரீதர் திரையரங்கில் நண்பர்களுடன் 'தாயைக் காத்த தனயன்' திரைப்படத்தை 'மாட்னி ஷோ'வாகப் பார்த்து மாலை வீடு திரும்பபோது இவர் எனக்காகக் காத்திருந்தார். நான் பஸ்ஸிலிருந்து இறங்கியபோது வந்த என்னை அரவணைத்தவாறு வீட்டுக்குக் கூட்டிச் சென்றார். அவ்விதம் செல்கையில் நான் அதிர்ச்சியடையாத வகையில் என் அப்பா இறந்த செய்தியினைத் தெரிவித்து என்னை ஆறுதல் படுத்தினார்.

இதனை என்னால் ஒருபோதுமே மறக்க முடியாது. என் கடைசிச் சகோதரி இவர்கள் குடும்பத்தினருடன் இறுதிவரையில் தொடர்புகளைப் பேணி வந்தவர். என் தங்கை இவரைப்பற்றிக் கூறுகையில் இவர் ஒவ்வொரு மாதமும் பொருளியல்ரீதியில் வாடும் பலருக்குப் பல்வேறு வகைகளில் நிதியுதவி செய்து வந்தவர் என்று கூறுவார்.

இவர் நேற்று மறைந்த செய்தியினை என் தங்கை அறியத்தந்தார். இவரது மறைவுச் செய்தி இவரைப்பற்றிய நினைவுகளை ஏற்படுத்தியது. இவரது பிரிவால் வாடும் குடும்பத்தவர், உறவினர்கள் , நண்பர்கள், மாணவர்கள் அனைவருக்கும் எனது ஆழ்ந்த இரங்கல்.

## 26. மறக்க  முடியாத அராலி இந்துக் கல்லூரி!

என்னால் மறக்க முடியாத கல்லூரி 'அராலி இந்துக் கல்லூரி' .  நான் அங்கு படித்ததில்லை, ஆனாலும் என் ஆழ்மனத்தில் அதற்கோரிடமுண்டு. காரணம் இங்குதான் என் அன்னையார் 'நவரத்தினம் டீச்சர்' (திருமதி மகேஸ்வரி நவரத்தினம்) 1972இலிருந்து எண்பதுகளில் ஓய்வு பெறும் வரையில் ஆசிரியையாகக் கற்பித்தவர். அதற்கு முன்னர் அவர் யாழ் இந்துக்கல்லூரி, யாழ் இந்து மகளிர் கல்லூரி, வவுனியா மகாவித்தியாலயம் ஆகியவற்றில் ஆசிரியையாகப் பணி புரிந்தவர். இங்குதான் என் தங்கைமார் இருவர், தம்பி ஆகியோர் படித்தனர். இவையே முக்கிய காரணங்கள். இங்கு நான் படிக்காவிட்டாலும் எந்நேரமும் இக்கல்லூரியைப்பற்றி வீட்டில் கதைத்துக்கொண்டிருப்பார்கள். அவற்றிலிருந்து இக்கல்லூரி பற்றி, ஆசிரியர்கள் பற்றியெல்லாம் அறிந்துகொண்டேன்.

இந்தப் பள்ளிக்கூடத்தில் நான் படிக்கவில்லை. ஆனால் இந்தப் பள்ளிக்கூடம் என் வாழ்வின் ஒரு காலகட்டத்துடன் பின்னிப்பிணைந்துள்ளது. குறிப்பாக என் பதின்மவயதுப் பருவத்துடன்  என்று கூறலாம். அதற்குக் காரணம் என் அம்மா. அம்மா ஓர் ஆசிரியை. திருமதி நவரத்தினம் டீச்சர் (திருமதி மகேஸ்வரி நவரத்தினம்) என்றால் எழுபதுகளில், எண்பதுகளில் அராலி இந்துக் கல்லூரியில் படித்தவர்களுக்கு நன்கு விளங்கும். தெரியும்.  அங்குதான் அவர் 1972இலிருந்து ஓய்வு பெறும் வரையில் படிப்பித்தார். அங்குதான் என் தங்கைமார் இருவர் மைதிலி , தேவகி மற்றும் சகோதரன் பாலமுரளி ஆகியோர் படித்தனர். அவர்களைப்பொறுத்தவரையில் அவர்களது பால்ய பருவம் அங்குதான் கழிந்தது. அவர்களுக்கும் அப்பருவத்து அழியாத கோல நினைவுகளைத் தரும் பாடசாலையாக அப்பாடசாலையும், ஊராக அராலி வடக்கும் நிச்சயமிருக்கும்.

இங்கு அம்மாவுடன் படிப்பித்த சக ஆசிரியர்கள் பற்றி அதிகம் அறிந்திருக்கின்றேன். ஒரு சிலருடன் வழியில் சந்திக்கையில் கதைத்துப் பழகியுமிருக்கின்றேன்.  மேலும் சிலரைப்பற்றி என் சகோதரர்கள் வாயிலாக அறிந்துமிருக்கின்றேன்.  அதனால் அவர்கள்தம் பெயர்கள் இன்னும் என் நினைவுகளில் ஆழப்பதிந்து கிடக்கின்றன. இவ்விதமாக நானறிந்த, என் நினைவில் நிற்கும் சில பெயர்கள் வருமாறு: செல்லையா டீச்சர், சந்திரா டீச்சர், பவானி டீச்சர், செல்வராசா மாஸ்ட்ர், அப்பச்சி மகாலிங்கம், சதாசிவம் மாஸ்டர், நெல்லைநாதன் மாஸ்டர், தர்மலிங்கம் மாஸ்டர். இவரகள் இன்னும் நினைவில் ஆழப்பதிந்து நிற்கின்றார்கள். இவர்களில் சிலருடன் நான் பழகவேயில்லை. இருந்தாலும் என் சகோதரர்கள் அவர்களைப்பற்றிய கூறிய  அவர்கள் தம் உணர்வுகளின் அடிப்படையில் நினைவில் நிற்கின்றார்கள்.

எழுத்தாளர் அப்பச்சி மகாலிங்கம் அவர்களைப்பற்றி அராலி இந்துக்கல்லூரி நிச்சயம் பெருமைப்படலாம் .   இவர் அராலி இந்துக்கல்லூரி ஆசிரியராகவிருந்தபோது இவரிடம் கல்வி கற்றவர் என் சகோதரன் பாலமுரளி.

தற்போது கடல்புத்திரன் என்னும் பெயரில் சிறுகதைகள், நாவல்கள் எழுதி வருபவர். இவரது 'வெகுண்ட உள்ளங்கள்' நாவல் எண்பதுகள் , தமிழரின் ஆயுதபோராட்டம் தொடங்கியிருந்த காலத்திலிருந்த அராலியை மையமாகக் கொண்டு எழுதப்பட்டதொரு நாவல். 'வேலிகள்'நாவலும் அராலியைக் கதைக்களனாகக் கொண்டதே. இவர் எப்பொழுதும் அப்பச்சி மகாலிங்கத்தைப்பெருமையுடன், அன்புடன் நினைவு கூர்வார். தனது கட்டுரையொன்றினை வாசித்து விட்டு நன்றாக எழுதுகிறாய். தொடர்ந்து எழுது என்று ஊக்குவித்தவர் என்பார். தனது 'வேலிகள்' கதைத்தொப்பில் அவர் பின்வருமாறு குறிப்பிட்டிருப்பார்:

"இந்த என் எழுத்து முயற்சிக்கும் சிறிய வரலாறு இருக்கிறது. முதலில் 6-9 வகுப்பு வரையில் எனக்கு தமிழ்ப்பாடம் கற்பித்த அப்பச்சி மகாலிங்கம் ஆசியரை குறிப்பிட்டேயாக வேண்டும். நான் எழுதுகிற கட்டுரைகளில் எழுத்துப்பிழைகள் இருந்தபோதும், அவற்றை பொறுமையுடன் படித்து எடுத்த விசயங்களையும், சம்பவங்களையும் பாராட்டியே வந்தார். 'அ' னாவையும் 'சு' னாவையும் கவனித்து எழுது. வித்தியாசமில்லாமல் எழுதுகிறாய் கவனமாகவிரு உன்னால் கொஞ்சமாவது எழுத முடியும் என்பார்".

அப்பச்சி மகாலிங்கம் அவர்களை நான் நேரில சந்தித்தில்லை. ஆனால் அவரது பத்திரிகைகளில் வெளியான எழுத்துகளூடு அறிந்தவன். கடற்றொழிலாளர்களை மையமாக வைத்து அவரது கதைகள் பல இருந்தன. அவரது நாவலொன்றும் வீரகேசரி பிரசுரமாகவும் வெளியானது. அவரது சிறுகதைகளில் 'கடல் அட்டைகள்' பற்றிய சிறுகதையொன்றைக் கடல்புத்திரன் அடிக்கடி சிலாகிப்பதை அவதானித்திருக்கின்றேன். ஈழநாடு பத்திரிகை நிறுவனம் தனது பத்தாவதாண்டு நிறைவையொட்டி நடத்திய இலக்கியப்போட்டிகளிலொன்றான சிறுகதைப்போட்டியில் பரிசு பெற்ற கதைகளில் ஒன்று அப்பச்சி மகாலிங்கத்தின் 'ஆறுதல் பரிசு'. இச்சிறுகதை பரிசு பெற்ற சிறுகதைகளின் தொகுப்பான 'கங்கு மட்டை'யிலும் இடம் பெற்றுள்ளது. நவாலிப்பகுதியில் வசித்து வந்தவர். அப்பச்சி மகாலிங்கம் அவர்களின் மகனான மகாலிங்கம் கௌரீஸ்வரன் என் முகநூல் நண்பர்களிலொருவர். அவர் அப்பச்சி மகாலிங்கம் பற்றி எனக்குத் தந்திருந்த தகவலினையும் இங்கு குறிப்பிட விரும்புகின்றேன். அதன் மூலம் அவரைப்பற்றி அவரது மாணவர்கள் அறிந்துகொள்ள முடியும்:
"மகாலிங்கம், அப்பச்சி யாழ்ப்பாணம், நவாலியைச் சேர்ந்த எழுத்தாளர். இவரது தந்தை அப்பச்சி; தாய் சிவக்கொழுந்து. இவர் நவாலி அமெரிக்க மிஷன் பாடசாலையிலும் மூதூர் பாடசாலையிலும் மானிப்பாய் மெமோறியல் ஆங்கிலப் பாடசாலையிலும் வட்டுக்கோட்டை யாழ்ப்பாணக் கல்லூரியிலும் கல்வி கற்றார். இவர் மாணவனாக இருக்கும் போதே வீரகேசரி மாணவர் பகுதியில் சில குட்டிக் கதைகளை எழுதியதுடன் இளஞாயிறு சஞ்சிகையில் ஆசிரியர் பொறுப்பை ஏற்று வரதன் என்ற புனைபெயரில் பல ஆக்கங்களை எழுதி வந்தார். விடத்தல் தீவு சிரேஷ்ட பாடசாலை, முள்ளியவளை வித்தியானந்தக் கல்லூரி, காங்கேசன்துறை நடேஸ்வராக் கல்லூரி, அராலி இந்துக் கல்லூரி ஆகியவற்றில் ஆசிரியராகக் கடமையாற்றி வந்த இவர், பாலசுப்பிரமணிய வித்தியாசாலையில் 01.01.1991 இல் ஓய்வு பெறும் வரை தலைமை ஆசிரியராகக் கடமையாற்றி

வந்தார். இவர் பல சிறுகதைகளையும் வானொலி நாடகங்களையும் மேடை நாடகங்களையும் படைத்துள்ளார். இவர் அந்திரான் முருகமூர்த்தி கோவில் நிருவாக சபையில் முக்கிய பொறுப்புக்களில் இருந்துள்ளார்."

செல்வராசா மாஸ்ட்ர் எப்பொழுதும் சிரித்த முகத்துடன் காணப்படுவார். கறுத்த 'லோங்ஸ்'ஸும், வெள்ளை சேர்ட்டுமாகா இவர் சைக்கிளில் செல்வதை அடிக்கடி கண்டிருக்கின்றேன். உயர்ந்த தோற்றம். என்னை வழியில் கண்டால் சிரித்துத் தலையாட்டிச் செல்வார். பஸ்ஸுக்காகக் காத்திருக்கையில் நிற்கும்போது கண்டால் சிறிது நேரம் நின்று விசாரித்து, கதைத்துவிட்டுச் செல்வார். என் தங்கைமார், சகோதரன் ஆகியோர் இவரிடம் கணிதம் படித்தவர்கள். இவர் சிறந்த கணித ஆசிரியரென்று அடிக்கடி கூறுவார்கள். அம்மா மீது மிகுந்த அன்பும், மதிப்பும் கொண்டவர்.அம்மாவும் இவர் மீது அதே மாதிரி அன்பும், மதிப்பும் கொண்டிருந்தார்.

சதாசிவம் மாஸ்டர். இவர் வட்டுக்கோட்டைப் பக்கமிருந்து வருபவரென்று நினைவு. இவரது மகனொருவர் என்னுடன் யாழ் இந்துக் கல்லூரியில் சிறிது காலம் படித்ததாக நினைவு. பெயர் உடனடியாக நினைவுக்கு வரவில்லை. சிவகுமார் என்னும் பெயராக இருக்கக் கூடும். அதனால் சதாசிவம் மாஸ்டரும் நினைவுக்கு வருகின்றார்.

நெல்லைநாதன் மாஸ்டர். இவருடனும் அதிகம் பழகியதில்லை. ஆனால் வழியில் கண்டால் டீச்சரின் மகனென்று சிரித்துத் தலையாட்டிச் செல்வார். வெள்ளை வேட்டி, நாஷனலுடன் , வட்டமான , செந்தழிப்பு மிக்க முகவாகு மிக்கவராக இவர் சைக்கிளில் செல்லும் தோற்றம் இன்னுமென் மனத்தில் பதிந்துள்ளது.

செல்லையா டீச்சர். தற்போது முதிய நிலையில் 'டொரோண்டோ', கனடாவில் வசிக்கின்றார். பேராசிரியர் பாலன் செல்லையாவின் மனைவி. அம்மாவின் நல்ல சிநேகிதிகளிலொருவராக விளங்கியவர். அதனால் அடிக்கடி இவரைப்பற்றி வீட்டில் கதைப்பார்கள். அதன் மூலம் அறிந்துகொண்டேன்.

தர்மலிங்கம் மாஸ்டர். உயர்ந்த தோற்றம். வெள்ளை வேட்டியும், சேர்ட்டுமாகக் கண்டிருக்கின்றேன். இவர் மலையகப்பகுதி அல்லது யாழ்ப்பாணத்துக்கு வெளியிலிருந்து வந்தவரென்று நினைவு. வீதியில் என்னைக் காணும்போதெல்லாம் டீச்சரின் மகனென்று சிரித்துத் தலையாட்டி, சில வேளைகளில் கதைத்துவிட்டும் செல்வார். சிரித்த முகத்துடன் எந்நேரமும் இவரைக் கண்டிருக்கின்றேன். இவர் ஒரு நல்ல நாடக நடிகர் என்றும் அறிந்திருக்கின்றேன்.

அம்மாவின் மாணவர்கள் - அப்பா இறந்தது 1977இல். அப்போது அம்மாவின் மாணவர்களான கிச்சான், சின்னப்பர் ஆகியோர் வந்திருந்து மிகவும் துணையாக, உதவியாக இருந்தார்கள். மறக்க முடியாது. அப்போதுதான் அவர்களை நானறிந்தேன்.

இவர்களைப்பற்றி இங்கு நான் முக்கியமாக எடுத்துரைத்ததற்குக் காரணங்கள் உள. அராலி இந்துக் கல்லூரி என்றதும் இவர்கள் அனைவரும் என் நினைவுகளில் தோன்றுவார்கள். அதனால் அராலி இந்துக் கல்லூரியை நினைவுபடுத்தும் ஆளுமைகள் இவர்கள். இன்னுமொரு காரணம் இவர்களைப் பற்றியெல்லாம் இன்றுள்ள தலைமுறை அறிந்துகொள்ளட்டுமென்பது. அடுத்த காரணம் அன்று இவர்களை அறிந்திருந்த பலருக்கும் நினைவூட்டுவதென்பது.

இச்சமயத்தில் இன்னுமொரு விடயத்தையும் குறிப்பிட வேண்டும். எனது சகோதரி முனைவர் மைதிலி ரவீந்திரன் தற்போது இங்கிலாந்தில் வசிக்கின்றார். இராசாயனத்துறையில் கலாநிதிப் பட்டம் பெற்றவர். பிரபல மருந்து நிறுவனங்கள் பலவற்றில் உயர் பதவிகள் வகித்தவர். தற்போது மருந்துகளைப் பாவனைக்கு விட முன்னர் அவற்றை பரிசோதித்து, அனுமதிக்கும் அத்துறையில் அறிவியல் அறிஞராகப் பணியாற்றுகின்றார். அடுத்தவர் மருத்துவர் தேவகி சிவானந். இவர்கள் இன்றுள்ள நிலைக்கும் அடித்தளமிட்ட பாடசாலை அராலி இந்துக் கல்லூரி. எப்பொழுதும் இவர்கள் அராலி இந்துக் கல்லூரியை அன்புடன், மதிப்புடன் நினைவு கூர்பவர்கள். என் சகோதரன் பாலமுரளி (ஏழுத்தாளர் கடல்புத்திரன்) எழுத்தாளனாக உருப்பெறுவதற்கு முக்கிய காரணங்களிலொன்று அராலி இந்துக் கல்லூரி.

அராலி இந்துக் கல்லூரி பற்றிய எனது நனவிடைதோய்தல் எனக்கு அராலி இந்துக் கல்லூரி பற்றி மட்டுமல்ல, அங்கு படிப்பித்த ஆசிரியர்கள் பற்றி, அம்மா அங்கு படிப்பித்த காலம் பற்றி, என் சகோதரர்கள் அங்கு படித்த காலம் பற்றியெனப் பல்வேறு நினைவுகளைச் சிறகடிக்க வைத்து விட்டது. அவை என் வாழ்வின் அழியாத கோலங்கள் எனில் மிகையல்ல.

## 27. மீண்டும் அம்மாவின் நினைவு!

இன்று , மார்ச் 26, அம்மாவின் நினைவு நாள். நவரத்தினம் டீச்சர் என்று அன்புடன் அவரது மாணவர்களாலும், 'மங்கை' என்று அவரது சிநேகிதிகளாலும் அன்புடன் அழைக்கப்பட்ட அவரது நினைவு நாள் என் சிந்தையில் அவருடன் கழித்த நாள்களை நினைவு கூர்ந்திட வைக்கின்றது. யாழ் இந்துக் கல்லூரி, யாழ் இந்து மகளிர் கல்லூரி, வவுனியா மகா வித்தியாலயம், அராலி இந்துக்கல்லூரி என அவர் ஆசிரியராகப் பணிபுரிந்த பாடசாலை மாணவர்களைத் தன் அன்பால், சிரிப்பால், மென்மையான அணுகுமுறையினால் கட்டிவைத்தவர் அவர். வாழ்நாளில் ஆத்திரப்பட்டுப் பேசி நான் பார்த்ததில்லை. சில சமயங்களில் குரலில் சிறிது கண்டிப்பைக் காட்ட முற்பட்டாலும் கூட அக்கண்டிப்பை அவரால் வெளிப்படுத்தவே முடிந்ததில்லை.

என் பால்யபருவத்தில் ஆரம்பத்திலிருந்து ஏழாம் வகுப்புவரை வவுனியா மகா வித்தியாலயத்தில் படித்த காலகட்டத்து நினைவுகள் அழியாத கோலங்கள். அதிகாலையிலேயே எழுந்து, காலைச்சாப்பாடு, மதியச்சாப்பாடு எல்லாம் தயாரித்து, மதிய உணவையும் பார்சல்களாகக் கட்டி அல்லது 'எவர்சில்வர்' தூக்கு பாத்திரத்திலிட்டு பாடசாலை அழைத்துச் செல்வார். குழந்தைகள் நாமும் குருமண்காட்டிலிருந்து பாடசாலைக்கு அவரணைப்பில் பின் தொடர்வோம். அதிகாலை நேரங்களில் ஸ்டேசன் 'றோட்டின்' ஒரு புறத்தே பசிய வயல்கள் காட்சியளித்தன. பச்சைக் கிளிகள், குக்குறுபான்கள், ஆலாக்கள், மைனாக்கள், காடைகள், சிட்டுக் குருவிகள், மாம்பழத்திகள், நீண்ட வாற் கொண்டை விரிச்சான் குருவிகள், நீர்க்காகங்கள், மணிப்புறாக்கள்,.. எனப்பல்வகைப்புள்ளினங்களின் மலிந்திருக்கும் வனப்பிரதேசங்கள் ஆங்காங்கே காணப்பட்டன. இயற்கையின் தாலாட்டில் எந்நேரமும் தூங்கிக் கிடக்கும் வன்னி மண்ணின் அதிகாலப்பொழுதுகளை எண்ணியதும் கூடவே அம்மாவுடன் பாடசாலைக்குச் சென்ற பருவங்கள் படர்ந்த நினைவுகள் , அவருடன் வாழ்ந்த அனுபவங்கள் சிந்தையில் படம் விரிக்கின்றன.

அவரது உலகமெல்லாம் பாடசாலையும் , குடும்பமும்தாம். அவற்றிலேயே அவர் இன்பமுற்றார். செல்லும் வழியில் அன்று வவுனியா எம்.பி.ஆகவிருந்த தா.சிவசிதம்பரத்தின் வீடிருந்தது. அதற்குப் பக்கத்தில் ஸ்டேசன் 'றோட்டி'ல் இராமச்சந்திரன் டீச்சர் வீடிருந்தது. அவர் ஒரு மொரிஸ் மைனர் கார் வைத்திருந்தார். சில சமயங்களில் அவருடன் அவர் காரில் பாடசாலை செல்வதுண்டு.

அவ்விதமாக அதிகாலைகளில் பாடசாலை நோக்கி ஸ்டேசன் வீதி வழியாகச் செல்லும் காலைப்பொழுதுகளில் எதிர்ப்புறமாக ஒருவர் மடித்துக் கட்டிய வேட்டியும், வெறும் தோளுமாக, வேப்பங்குச்சியால் பற்களை விளக்கியபடி வருவார். பார்த்தால் அசல் என்.எஸ்.கிருஷ்ணனைப்போலவே இருப்பார். அவரைப்பார்க்கும் நேரமெல்லாம் நான் அம்மாவிடம் 'என்.எஸ்.கிருஷ்ணன்

வாறார்' என்று கூறுவேன். ஒருநாள் அம்மா அவரிடம் 'இவர் உங்களைப்பார்க்க என்.எஸ்.கிருஷ்ணனைப்போல இருக்குதாம் என்று கூறுகிறான்' என்று கூறி விட்டார். அதைக்கேட்டதும் பல்லை விளக்கியபடி வந்து கொண்டிருந்த என்.எஸ்.கிருஷ்ணனின் 'வாயெல்லாம் பல்'. 🙂 இப்பொழுதும் நினைவில் பசுமையாக நினைவிலுள்ளது.

அவர் அன்னையாகவும், வவுனியா மகா வித்தியாலயத்தில் ஏழாம் வகுப்பு படித்துக்கொண்டிருந்த காலகட்டத்தில் என் புவியியல் ஆசிரியராகவும் விளங்கியவர். . அவ்வப்போது குட்டிக் கதைகள் சிலவற்றையும் பாடத்தின் இடை நடுவில் கூறிச் சிரிக்க வைத்து, மாணவர்களை உற்சாகப்படுத்திப் பாடத்தைத் தொடர்வார்.

சில சமயங்களில் பாடசாலையில் ஏதாவது நிகழ்வுகள் நடக்கும் சந்தர்ப்பங்களில் வீடு திரும்ப நேரமாகிவிடும். நகர் நேரத்துடனேயே இருண்டு விடும். வவுனியா மகாவித்தியாலயத்திலிருந்து குருமண்காடு வரை எம்மை அரவணைத்தபடி ' சிவசிவா' சிவசிவா என்ற முணுமுணுப்புடன் (அவர் தெய்வபக்தி மிக்கவர்) அழைத்துச் செல்வார். ஆங்காங்கே மாடுகள் சிலவற்றின் அசைபோடும் ஒலிகள் தவிர வேறெதுவுமற்ற நிலையில், 'ஸ்டேசன் றோடு' வழியாக மன்னார் றோடேறிக் குருமண்காட்டுப்பகுதியை வந்து சேர்வோம்.

வவுனியா மகா வித்தியாலயம் என்றதும் என் நினைவில் நிற்கும் இன்னுமொரு விடயம். ஒருமுறை (அறுபதுகளில்) அங்கு கலைவிழாவும் (கண்காட்சியுடன் கூடிய) இரண்டு மூன்று நாள்களாக நடைபெற்றது. அக்கலைவிழாவின் இறுதி நாளன்று அப்பொழுதுதான் மைதானத்தின் ஒரு புறத்தே இவ்விதமான நிகழ்வுகளை நடாத்துவதற்காக அமைக்கப்பட்டிருந்த திறந்தவெளி மேடையில் நடைபெற்ற அரிச்சந்திரா நாடகம். நாடகத்தின் மயானக் காட்சியும் நடிகர்களின் உணர்ச்சிகரமான நடிப்பும் இன்னும் ஞாபகத்திலுள்ளன. அக்காலகட்டத்தில் மூன்று முறிப்பிலுள்ள பாடசாலையொன்றின் அதிபராக இளைஞரொருவர் பணியாற்றிக்கொண்டிருந்தார். ஆங்கிலப்பட்டதாரியான அவர் நீண்ட தலை முடி வளர்த்து ஹிப்பி போன்ற தோற்றத்தில் திரிவார். அவரை அடிக்கடி அக்காலகட்டத்தில் நகரில் காண்பதாலும், அக்கலைவிழாவிலும் கண்டதாலும் அக்கலைவிழாவைப்பற்றி எண்ணியதும் அவரது தோற்றமும் கூடவே ஞாபகத்துக்கு வந்து விடுவது வழக்கம்.  அக்கலைவிழாவில் ஆசிரியையான அம்மாவுக்கு முன்னர் மாணவனைப்போன்று பவ்வியமாக , மரியாதையுடன் அவர் சிறிது நேரம் கதைத்துக்கொண்டிருந்ததும் நினைவிலுள்ளது.

இன்னுமொரு விடயமும் எனக்கு அடிக்கடி ஞாபகம் வருவதுண்டு. பல்கலைக்கழக நாட்களில் சொல்லாமல் கொள்ளாமல் வீடு திரும்புவேன். அப்பொழுது அராலி வடக்கில் வசித்து வந்த காலம். அம்மா அராலி இந்துக்கல்லூரியில் படிப்பித்துக்கொண்டிருந்தார். எதிர்பாராமல் நான் வந்ததைக்கண்டதும் அவர் அடையும் மகிழ்ச்சியைப்பார்க்க வேண்டுமே.. அங்கிருக்கும் அடுத்த சில தினங்களும் எனக்குப்பிடித்த இட்லி, தோசையென்று ஆக்கிப்போட்டுத் திக்கு முக்காட வைத்து விடுவார். பின்னர் மீண்டும்

அதிகாலையொன்றில் காலை யாழ்தேவியை எடுப்பதற்காக மீண்டும் பல்கலைக்கழகம் திரும்புவேன். அன்றும் அதிகாலை நேரத்துடன் எழுந்து வழியில் உண்பதற்காக உணவு வகைகளை ஆக்கிக் கட்டித்தருவார். வீட்டை விட்டு வெளியில் கால் வைக்கும்போது, பின்னால் கலங்கிய கண்களுடன் விடை தரும் அம்மாவின் முகத்தைப் பார்க்க முடியாமல் செல்வேன்.
எனக்குத்துணையாக பஸ் தரிப்பு வரை போடும் உணவுக்கு நன்றியாக வீட்டை அண்டி வாழும் ஞமலி (நாய்) துணைக்கு வரும். அந்த அதிகாலைக்கருக்கிருளில் தலை விரித்தாடிக்கொண்டிருப்பர் பனைப்பெண்கள். அந்த அதிகாலைகள் இன்னும் பசுமையாக நினைவிலுள்ளன.

முகநூல் என் பால்யபருவத்து நண்பர்கள்  பலரை மீண்டும் என் வாழ்வில் இணைத்துள்ளது. அவர்களில் பலருக்கு நவரத்தினம் டீச்சரைத் தெரியும். பலர் அவருடனான தம் அனுபவங்களை என்னுடன் பகிர்ந்திருக்கின்றார்கள்.
அம்மாவின் நினைவு நாள் மீண்டும் அவரைப்பற்றிய பல நினைவுகளை நெஞ்சில சிறகடிக்க வைத்துவிட்டன.

## 28. வரலாற்றுச் சுவடுகள்: வேங்கை ஆனந்தனும் அவரது மறைவும்!

இவ்விளைஞரை நான் அவ்வப்போது எண்ணிப்பார்ப்பதுண்டு. இவர் என் நண்பரல்லர். என் தம்பியின் நண்பர். என் நண்பர் சிறீயின் (ஶ்ரீசதானந்தநாயகம்) சகோதரர். நான் அராலி வடக்கில் வசித்த காலம் என் பதின்ம வயதுகளிலிருந்து புகலிடம் நாடி நாட்டை விட்டு வெளியேறிய காலம் வரையிலான காலகட்டம். சந்திக்கும் சமயங்களிலெல்லாம் மிகவும் தன் படிப்பு பற்றிக் கதைப்பார். அல்லது ஏதாவது ஊர்ப்புதினங்கள், நாட்டுப் புதினங்கள் பற்றிக் கதைப்பார். எப்பொழுதும் சிரிப்பு தவழும் முகவாகு. இவர்தான் ரகு. இவரது இயற்பெயர் அருமைநாயகம் ஶ்ரீ சத்தியானந்தநாயகம். இவருக்கு இப்பெயர் வந்ததற்குக் காரணமுண்டு. இவர் பிறந்தபோது இலங்கைப்பாராளுமன்றத்துக்கு முன் சத்தியாக்கிரகம் ஶ்ரீ பிரச்சினை காரணமாக நடைபெற்றுக்கொண்டிருந்தது. அதன் காரணமாகவே ஶ்ரீ சத்தியானந்தநாயகம் என்று பெயர் வைக்கப்பட்டதாக இவரது அண்ணரும், எனது நண்பருமான ஶ்ரீ (ஶ்ரீ சதானந்தநாயகம்) கூறியிருக்கின்றார்.

என் பல்கலைகழகக்காலத்தில்தான் இவர் இலங்கைத்தமிழர் அரசியலில் நாட்டமுள்ளவர் என்பதே எனக்குத் தெரிய வந்தது. நான் சிறிதும் இவர் அரசியலில் நாட்டம் கொண்டிருப்பார் என்று எண்ணியேயிருந்ததில்லை. அக்காலகட்டத்தில் தமிழர் விடுதலைக் கூட்டணியின் மாணவர் பேரவையில் சேர்ந்து இயங்கிக்கொண்டிருந்தார். அப்பொது இவர் வேங்கை ஆனந்தன் என்னும் பெயரில் இயங்கிக்கொண்டிருந்ததாக அறிந்திருந்தேன்.

இது பற்றி நண்பர் ஶ்ரீசதானந்தநாயகத்தின் தகவல்களின்படி இவர் ஆரம்பத்தில் கல்விப்பொதுத்தராத உயர்தர வகுப்பை யாழ் மத்திய கல்லூரியிலும், பின்னர் காரைநகர் இந்துக்கல்லூரியிலும் கற்றவர். அங்கு கற்றுக்கொண்டிருக்கையில் அங்கு விஜயம் செய்த வண்ணை ஆனந்தன், காசி ஆனந்தன் மற்றும் கூட்டணிச் செயலதிபர் அமிர்தலிங்கம் ஆகியோரைச் சந்தித்திருக்கின்றார்.

பின்னர் மாவை சேனாதிராசா, வண்ணை ஆனந்தன் ஆகியோர் இவரைக் கல்லூரி உயர்தர மாணவர் சங்கத்தின் சார்பில் கூட்டணிக் கூட்டங்களில் கலந்துகொள்ளுமாறு வேண்டியிருக்கின்றார்கள். அதன் விளைவாக இவர் கூட்டணியில் நாட்டம்கொண்டு இயங்கத்தொடங்கியிருக்கின்றார். அதற்குப் பாடசாலை ஆசிரியர் ஒருவரிடமிருந்து எதிர்ப்பு வந்துள்ளது. 1977ற்குப்பின்னர் ஏற்பட்ட அரசியல் சூழலில் இவர் மட்டக்களப்பு பா.உ செ.ராசதுரை, கவிஞர் காசி ஆனந்தன் ஆகியோரின் உதவியுடன் சிவானந்த கல்லூரியில் தனது உயர்தர வகுப்பைப் பூர்த்தி செய்துள்ளார். அங்குதான் கவிஞர் காசி ஆனந்தன் இவருக்கு வேங்கை ஆனந்தன் என்னும் பெயரைச்சூட்டி கூட்டணியின் மாணவர் பேரவைத் தலைவராக்கியுள்ளார்.

இக்காலகட்டத்தில்தான் இவரைத்தேடி பொலிசார் அராலி வடக்கைச் சுற்றி

வளைத்ததாகப் பத்திரிகைச்செய்திகள் மூலம் அறிந்தேன்.
பின்னர் நான் நாட்டுச் சூழல் காரணமாக நான் வெளியேறி விட்டேன். ஆனாலும் அவ்வப்போது இவரைப்பற்றிய செய்திகளை நாட்டிலிருந்த தம்பி மூலம் கேட்டறிவதுண்டு. அப்பொழுதுதான் இவர் இயக்கமொன்றில் சேர்ந்தியங்கியதாகவும், பின்னர் காணாமல் போனதாகவும் அறிந்தேன். இன்று வரை அதுபற்றிய சரியான தகவல்களில்லை.

இவரது அண்ணரின் கூற்றுப்படி ஒருகட்டத்தில் இவர் குடும்பத்தாருடனான தொடர்புகளைத் துண்டித்துக்கொண்டார். பின்னர் இந்தியப்படை வருவதற்கு முன்பாக மீண்டும் அராலிக்கு வந்துள்ளார். அங்கு அகதிகளுக்கு ஆடைகள், உணவு சேகரிப்பதற்கான நிலையமொன்றைப் பராமரித்துக்கொண்டிருந்தார். இச்சமயத்தில் இந்தியாவில் ஆயுதப்பயிற்சி பெற அழைக்கப்பட்டுள்ளார். இவர் மறுத்து விலகியுள்ளார். அச்சமயத்திலொருநாள் சைக்கிளில் கடையொன்றுக்குப் பால் வாங்கச் சென்றுகொண்டிருக்கையில் சைக்கிளுடன் டெலிகா வானொன்றில் வந்த மூவரால் கடத்தப்பட்டுள்ளார். அதன் பிறகு இன்றுவரை அவர் பற்றிய தகவல்கள் எவையுமில்லை.

கூட்டணியின் மாணவர் அமைப்பின் முக்கியமான ஒருவர் காணாமல் போயிருக்கின்றார். இன்றுவரை இவரைப்பற்றிய எவ்விதச் செய்திகளுமில்லை. இவரது இறுதிக்காலம் பற்றி அறிந்திருந்தவர்கள் அவை பற்றிப் பகிர்ந்துகொள்ளுங்கள். இவரைப்போன்ற பலரைப் போர்ச்சூழல் பலிகொண்டுள்ளது. அவர்கள் எல்லோரும் மறக்கப்பட வேண்டியவர்களல்லர். எப்போதும் நினைவு கூரப்பட வேண்டியவர்கள்.

## 29. எழுத்தாளர் அப்பச்சி மகாலிங்கம்

எழுத்தாளர் அப்பச்சி மகாலிங்கம் அவர்களை நான் நேரில் சந்தித்ததில்லை. ஆனால் அம்மா அராலி இந்துக்கல்லூரியில் ஆசிரியையாகப் பணிபுரிந்தபோது என் சகோதரன், இளைய சகோதரிகள் இருவரும் அங்குதான் படித்தார்கள். அங்குதான் ஆசிரியராக அப்பச்சி மகாலிங்கம் அவர்களும் பணி புரிந்து வந்தார். நவாலிப்பக்கம் வசித்து வந்ததாக என் தம்பி கூறுவான். அப்பச்சி மகாலிங்கம் அவர்களை நான் நேரில் அறிந்திருக்காவிட்டாலும் , அவரது சிறுகதைகள் பல வீரகேசரி வாரவெளியீட்டில், ஈழநாடு (யாழ்ப்பாணம்) வாரமஞ்சரியில் வெளியாகியிருப்பதை அறிந்திருக்கின்றேன். கடற்றொழிலாளர்களை மையமாக வைத்து அவரது கதைகள் பல இருந்தன.

என் தம்பி எழுத்தாளர் கடல்புத்திரனாக உருமாறியதற்கு முக்கிய காரணமாக இருந்தவர்களில் ஒருவர் அப்பச்சி மகாலிங்கம். இது பற்றிக் கடல்புத்திரன் தனது 'வேலிகள்' சிறுகதைத்தொகுதியில் பின்வருமாறு கூறுவார்: "இந்த என் எழுத்து முயற்சிக்கும் சிறிய வரலாறு இருக்கிறது. முதலில் 6-9 வகுப்பு வரையில் எனக்கு தமிழ்ப்பாடம் கற்பித்த அப்பச்சி மகாலிங்கம் ஆசியரை குறிப்பிட்டேயாக வேண்டும். நான் எழுதுகிற கட்டுரைகளில் எழுத்துப்பிழைகள் இருந்தபோதும், அவற்றை பொறுமையுடன் படித்து எடுத்த விசயங்களையும், சம்பவங்களையும் பாராட்டியே வந்தார். “அ” னாவையும் ‘சு’ னாவையும் கவனித்து எழுது. வித்தியாசமில்லாமல் எழுதுகிறாய் கவனமாகவிரு உன்னால் கொஞ்சமாவது எழுத முடியும் என்பார்".

அவரது நாவலொன்றும் வீரகேசரி பிரசுரமாகவும் வெளியானது. அவரது சிறுகதைகளில் 'கடல் அட்டைகள்' பற்றிய சிறுகதையொன்றைக் கடல்புத்திரன் அடிக்கடி சிலாகிப்பதை அவதானித்திருக்கின்றேன்.

அவரது ஆக்கங்களை மீண்டும் படிக்க வேண்டுமென்று ஆசையேற்பட்டது. நூலகம் தளத்திலும் தேடிப்பார்த்தேன். நூல்களாகக் கிடைக்கவில்லை. பத்திரிகைகள், சஞ்சிகைகளில் இருக்கலாம். தேடிப்பார்க்க வேண்டும். ஈழநாடு பத்திரிகைகள் பல இன்னும் வாசிக்கும்படியாக பதிவேற்றம் செய்யப்படவில்லை.

இவரது புத்திரனான மகாலிங்கம் கௌரீஸ்வரன் என் முகநூல் நண்பர்களிலொருவராக இருக்கின்றார். அண்மையில்தான் அறிந்துகொண்டேன். விரைவில் அவரது படைப்புகளை நூலுருவில் பார்க்கக் காலம் துணை செய்யட்டும்.

இவரைப்பற்றி நூலகம் தளத்தில் ஆளுமைகள் பகுதியில் பின்வருமாறு குறிப்பிடப்பட்டுள்ளது:

"மகாலிங்கம், அப்பச்சி யாழ்ப்பாணம், நவாலியைச் சேர்ந்த எழுத்தாளர். இவரது

தந்தை அப்பச்சி; தாய் சிவக்கொழுந்து. இவர் நவாலி அமெரிக்க மிஷன் பாடசாலையிலும் மூதூர் பாடசாலையிலும் மானிப்பாய் மெமோறியல் ஆங்கிலப் பாடசாலையிலும் வட்டுக்கோட்டை யாழ்ப்பாணக் கல்லூரியிலும் கல்வி கற்றார். இவர் மாணவனாக இருக்கும் போதே வீரகேசரி மாணவர் பகுதியில் சில குட்டிக் கதைகளை எழுதியதுடன் இளஞாயிறு சஞ்சிகையில் ஆசிரியர் பொறுப்பை ஏற்று வரதன் என்ற புனைபெயரில் பல ஆக்கங்களை எழுதி வந்தார். விடத்தல் தீவு சிரேஷ்ட பாடசாலை, முள்ளியவளை வித்தியானந்தக் கல்லூரி, காங்கேசன்துறை நடேஸ்வராக் கல்லூரி, அராலி இந்துக் கல்லூரி ஆகியவற்றில் ஆசிரியராகக் கடமையாற்றி வந்த இவர், பாலசுப்பிரமணிய வித்தியாசாலையில் 01.01.1991 இல் ஓய்வு பெறும் வரை தலைமை ஆசிரியராகக் கடமையாற்றி வந்தார். இவர் பல சிறுகதைகளையும் வானொலி நாடகங்களையும் மேடை நாடகங்களையும் படைத்துள்ளார். இவர் அந்திரான் முருகமூர்த்தி கோவில் நிருவாக சபையில் முக்கிய பொறுப்புக்களில் இருந்துள்ளார்."

இலங்கைத் தமிழ் இலக்கியத்துக்கு வளம் சேர்த்த படைப்பாளிகளில் அப்பச்சி மகாலிங்கம் அவர்களும்  ஒருவர். அவரது ஆக்கங்கள் நூருலுருப்பெறுவதும் அவசியம்.

## 30. யாழ் நூலகம் பற்றி மேலும் சில நினைவுகள்....

யாழ் நூலகத்தைப்பற்றிய நினைவுகள் மேலும் சில விடயங்களையும் நினைவு படுத்தி விட்டது. யாழ் இந்துக்கல்லூரியில் படித்துக்கொண்டிருந்த காலகட்டத்தில் என் உற்ற தோழர்களில் ஒருவராக விளங்கிய நூலகமிது. அக்காலகட்டத்தில் கல்கி, சாண்டில்யன் போன்றோரின் வெகுசனப்படைப்புகளை தேடித்தேடி வாசித்துக்கொண்டிருந்த காலகட்டம். கல்கியின் 'அலையோசை' , சாண்டில்யனின் 'கடல்புறா' இவையெல்லாம் நீண்ட நாள்களாக எனக்கு அகப்படாமலேயே இருந்தன. குறிப்பாக 'அலையோசை' நாவலுக்காகப் பதிவு செய்தும் அந்நாவல் என் கைகளுக்குக் கிடைக்காமலிருந்தது. அதற்குக் காரணங்களிலொன்று .... அங்கு பணியாற்றும் ஊழியர்கள் சிலர் தமக்குத் தெரிந்தவர்களுக்கெல்லாம் இவ்வகையான அதிக தேவையுள்ள நூல்களை எவ்வித முன் பதிவிகளுமில்லாமல் பெற்றுக்கொள்ள உதவுகின்றார்கள் என்றொரு குற்றச்சாட்டையும் கேள்விப்பட்டிருந்தேன். எனக்கு அலையோசை போன்ற நூல்கள் கிடைக்காததற்கும் அதுவே காரணமென்று எண்ணினேன்.

அக்காலகட்டத்தில் யாழ்ப்பாணத்திலிருந்து வெளியாகும் ஈழநாடு பத்திரிகையில் என் படைப்புகள் வெளியாகிக்கொண்டிருந்தன. குறிப்பாக மாணவர் மலரில் என்னை அறிமுகப்படுத்திய ஈழநாடு எனது சிறுகதைகளைப் பிரசுரிக்கத்தொடங்கியிருந்த காலகட்டம். யாழ் நூலகத்தில் எனக்கேற்பட்ட நிலையினை மையமாக வைத்து கடிதமொன்றினை ஈழநாடு பத்திரிகைக்கு அனுப்பி வைத்தேன். அவர்களும் பிரசுரித்து விட்டார்கள்.

அப்பொழுது நூலகப்பொறுப்பாளராக இருந்தவர் திருமதி ரூபவதி நடராஜா அவர்கள். அவர்களது யாழ் நூலகம் பற்றிய 'யாழ்ப்பாணப்பொது நூலகம் அன்றும் இன்றும்' என்னும் நூலொன்று ஜுன் 1 அன்று இலண்டனில் வெளியாகவுள்ளது. அவரது யாழ் நூலகம் பற்றிய நூல் வெளியீடு சிறப்பாக அமைய வாழ்த்துகள். இவர் அண்மைக்காலமாக என் முகநூல் நண்பர்களிலொருவராகவும் விளங்கி வருகின்றார். இப்போது நான் கூறப்போகும் விடயம் அவருக்குத் தெரிந்திருக்கலாம்; மறந்திருக்கலாம். ஆனால் அக்கடிதத்தை எழுதிய கிரிதரன் நான் தான் என்பது இதுவரை தெரிந்திருக்காதென்று நினைக்கின்றேன். அக்கடிதம் அக்காலகட்டத்தில் 'பிரதம நூலக'ராகவிருந்த அவருக்கு மன உளைச்சலைக் கொடுத்திருக்குமானால் அதற்காக அவரிடம் இன்று வருத்தம் தெரிவித்துக் கொள்கின்றேன்.

அக்கடிதம் நூலக ஊழியர்கள் மத்தியில் மிகுந்த அதிர்ச்சியை ஏற்படுத்தியிருக்க வேண்டும். ஆத்திரத்தையும் ஏற்படுத்தியிருக்க வேண்டும். ஆனால் அடிக்கடி அங்கு செல்லும் யாருக்குமே என் மேல் எவ்விதச் சந்தேகமும் ஏற்பட்டிருக்கவில்லை.

மாணவப்பருவத்தில் நானிருந்தது அதற்கான காரணங்களிலொன்றாக

இருந்திருக்கக் கூடும். ஆனால அக்காலகட்டத்தில் நூலக அங்கத்தவராகவிருந்த கிரிதரன் என்னும் பெயருள்ள இன்னுமொருவர் பேரில் அவர்களுக்குச் சந்தேகம் ஏற்பட்டது. அவர் குளப்பிட்டியும் மானிப்பாய் வீதியும் சந்திக்குமிடத்திற்கு அண்மையில் , குளப்பிட்டி வீதியில் வசித்தவர். அவருடைய சகோதரியொருவர் யாழ் நீதிமன்றத்தில் வழக்கறிஞராகவிருந்தவர். யாழ்ப்பாண நூலக ஊழியர்கள் ஈழநாட்டுக் கடிதமெழுதியவர் அவர்தானென்று நினைத்து குளப்பிட்டி கிரிதரனையும் , அவரது சகோதரியையும் அவர்கள் நூலகம் சென்றபோது திட்டித்தீர்த்திருக்கின்றார்கள். இதனால் ஆத்திரமுற்ற குளப்பிட்டி கிரிதரன் ஈழநாடு பத்திரிகை நிறுவனத்துக் சென்று எனது அராலி வடக்கு முகவரியைப்பெற்று அங்கு சென்றிருக்கின்றார். அப்போது நான் ஆச்சி வீட்டில் யாழ்ப்பாணத்தில் தங்கி நின்றதால் அவரைச் சந்திக்கவில்லை.

பின்னர் அவ்விடயம் பற்றி அறிந்து குளப்பிட்டி வீதியில் வசித்துக்கொண்டிருந்த நண்பர் அநபாயனுடன் குளப்பிட்டி கிரிதரனின் வீட்டுக்குச் சென்றேன். அப்பொழுது அவர் அங்கிருக்கவில்லை. அங்குள்ளவர்களிடம் நூலகப்பிரச்சினைக்குக் காரணமான கிரிதரன் நான் தான் என்றும், நான் அப்பிரச்சினையைக் கவனித்துக்கொள்வேன் என்றும் கூறிவிட்டுத் திரும்பினேன்.

அதன் பின்னர் மீண்டுமொரு கடிதமொன்றினை ஈழநாடு பத்திரிகைக்கு அனுப்பி வைத்தேன். அதில் நூலகம் தற்போது மீண்டும் சிறப்பாக இயங்குவதைக் குறிப்பிட்டு , ஊழியர்களின் நடத்தையையும் பாராட்டியிருந்தேன். ஈழநாடு அக்கடிதத்தையும் பிரசுரித்தது. அத்துடன் அப்பிரச்சினை முடிவுக்கு வந்தது. திருமதி ரூபவதி நடராஜா யாழ் நூலகம் பற்றிய 'யாழ்ப்பாணப்பொது நூலகம் அன்றும் இன்றும்' என்னும் நூலானது நிச்சயம் யாழ் நூலகம் பற்றிய நல்லதோர் ஆவணமாக வி:ளங்கும். விழா சிறப்புறவும் , வெற்றியடையவும் மீண்டும் எனது வாழ்த்துகள்.

## 31. மூத்த ஊடகவியலாளர் 'ஈழநாடு'பெருமாள்

இன்று வெளியான 'காலைக்கதிர்' பத்திரிகைச் செய்தி என் கவனத்தை ஈர்த்தது. .கூடவே துயரினையும் தந்தது. பழம்பெரும் பத்திரிகையாளர் 'பெருமாள்' அவர்கள் தனது எண்பத்தியாறாவது வயதில் மறைந்த செய்தியே அது. 'காலைக்கதிர்' செய்தியின்படி அவர் ஈழநாடு செய்தி ஆசிரியராகவும், பின்னாளில் உதயன் பத்திரிகையின் ஆசிரியபீடத்திலும் பணியாற்றியதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. தன் உடலை யாழ் பல்கலைக்கழக மருத்துவ பீடத்துக்குக் கையளிக்க வேண்டுமென்ற அவரது விருப்பத்துக்கேற்ப அவரது உடல் கையளிக்கப்பட்டதாகவும் மேற்படி செய்தியில் குறிப்பிடப்பட்டுள்ளது.

மூத்த பத்திரிகையாளர் பெருமாள் அவர்களின் மறைவு என் நினைவுகளை அசை போட வைத்து விட்டது. என் இலக்கிய வாழ்க்கையில் அவரை நான் ஒருபோதுமே மறக்க மாட்டேன். என் எழுத்துலகத்தின் ஆரம்பக் காலகட்டத்தில் என்னை ஊக்குவித்த பத்திரிகையாளர்களில் அவர் முதலிடத்திலிருப்பவர். இவ்வளவுக்கும் இன்றுவரை அவரை நான் ஒரு தடவை கூடச் சந்தித்ததில்லை. அவர் எப்படியிருப்பார் என்பது கூடத் தெரிந்திருக்கவில்லை. இருந்தும் எப்பொழுதும் என் நெஞ்சில் அவருக்கு எப்போதுமோரிடமிருக்கும்.

அக்காலகட்டத்தில்தான் நான் சிறுகதைகள் எழுதத்தொடங்கியிருந்தேன். சிரித்திரன் சஞ்சிகையில் என் முதலாவது சிறுகதை வெளியாகியிருந்தது. அப்பொழுது நான் யாழ் இந்துக்கல்லூரியில் கல்விப்பொதுத் தராத உயர்தர வகுப்பில் , விஞ்ஞானப்பிரிவில் கல்வி கற்றுக்கொண்டிருந்தேன். அதன்பின் நான் எழுதிய சிறுகதை 'அஞ்சலை என்னை மன்னித்து விடு'. அது வீட்டு வேலைக்காரியாகப்பணிபுரியும் ஏழைச்சிறுமியிருத்தியைப்பற்றிய சிறுகதை. அதுவே ஈழநாடு பத்திரிகையில் வெளியான எனது முதற்சிறுகதை. அப்பொழுது ஈழநாடு வாரமலர் ஆசிரியராகக் கடமையாற்றிக்கொண்டிருந்தவர் பெருமாள் அவர்கள். அதன்பின் எனது சிறுகதைகளான 'இப்படியும் ஒரு பெண்' , 'மணல் வீடுகள்', 'பல்லி சொன்ன பாடம்' ஆகியவை ஈழநாடு வாரமலரில் வெளியாகின. இவற்றைத்தொடர்ந்து 'நியதி' என்னும் உருவகக் கதை, நல்லூர் ராஜதானி நகர அமைப்பு பற்றிய கட்டுரைகள் இரண்டு, புத்தாண்டுக் கவிதையொன்று, யாழ்நகரிலுள்ள பழமையின் சின்னங்களைப்பேணப்படுதலின் அவசியம் பற்றிய கட்டுரை ஆகியவை ஈழநாடு வாரமலரில் வெளியாகியன. அவற்றை வெளியிட்டு என்னை ஊக்குவித்தவர் பெருமாள் அவர்கள்.

ஆரம்பத்தில் என் பால்யப் பருவத்தில் என் ஆக்கங்களுக்குக் களம் அமைத்துத்தந்தது ஈழநாடு பத்திரிகையின் மாணவர் மலர். பின்னர் என் பதின்ம வயதுகளில் என் எழுத்துலகத்தின் அடுத்த கட்டத்தில் களமமைத்துத் தந்த முக்கியமான பத்திரிகை ஈழநாடு. அக்காலகட்டத்தில் அதற்கு உறுதுணையாகவிருந்தவர் பெருமாள் அவர்கள்.

நான் பல்கலைக்கழகத்தில் படித்துக்கொண்டிருந்த சமயம் ஈழநாடு அப்பத்திரிகையின் வாரமலரில் எழுதிக்கொண்டிருந்த இளம் எழுத்தாளர்களைப்பற்றிய காவலூர் ஜெகநாதனின் கட்டுரைகளை வெளியிட்டுக்கொண்டிருந்தது. என்னையும் பற்றி எழுதும்படி காவலூர் ஜெகநாதனை அது வேண்டியிருந்தது. காவலூர் ஜெகநாதனும் தொடர்புகொண்டிருந்தார். தபால் மூலம் கேள்விகளை அனுப்பியிருந்தார். அத்துடன் என் புகைப்படத்தை புளக் செய்து அனுப்பும்படியும் கோரியிருந்தார். நானும் படிப்புச் சூழல் காரணமாக என் புகைப்படத்தை அனுப்பவில்லை. அந்நேர்காணலும் வெளிவராமலேயே போனது. அவ்விதம் என்னை நேர்காணல் செய்யும்படி கோரியதும் பெருமாளாகத்தானிருக்க வேண்டும் என்று எண்ணுகின்றேன். ஏனெறால் அவர்தான் அப்போதும் ஈழநாட்டில் வாரமலர் ஆசிரியராகப் பணியாற்றிக்கொண்டிருந்தார்.

அப்பொழுது நான் அராலி வடக்கில் வசித்து வந்தேன். அம்மா (நவரத்தினம் டீச்சர்) அராலி இந்துக் கல்லூரியில் ஆசிரியையாகக் கற்பித்துக்கொண்டிருந்த காலகட்டம். அராலி வடக்கிலிருந்து ஒரு பெண்மணி நாங்கள் பாடசாலை செல்வதற்காக யாழ்ப்பாணம் செல்லும் பஸ்ஸில் பயணிப்பார். அவரை எல்லோரும் ஈழநாடு அக்கா அன்று கூறுவார்கள். அவர் ஈழநாடு பத்திரிகையில் பணிபுரிவதால் அவர் அவ்விதம் அழைக்கப்பட்டார். அவரையே பின்னர் பெருமாள் அவர்கள் திருமணம் செய்ததாகவும் அறிந்தேன்.

'ஈழநாடு' அக்காவுக்கும் 'டீச்சரின்' மகனான நானே ஈழநாடு பத்திரிகையில் எழுதுபவன் என்பது என் அம்மா மூலம் தெரிந்திருக்க வேண்டுமென்று நினைக்கின்றேன். ஏனென்றால் அவர் ஓரிரு தடவைகள் என் சகோதரிகளிடம் பெருமாள் அவர்கள் என்னைப்பற்றிக்கதைத்தது பற்றிக் குறிப்பிட்டிருக்கின்றார். சகோதரிகள் கூறியிருக்கின்றார்கள்.

பத்திரிகையாளர் பெருமாளின் மறைவு பற்றிய செய்தி அவரைப்பற்றிய நினைவலைகளை எழுப்பி விட்டது. பெருமாள் அவர்களின் பிறந்த வீடு மலையகம். புகுந்த வீடு யாழ்ப்பாணம். மலையகத்திலிருந்து வந்து யாழ்ப்பாணத்துப் பத்திரிகை உலகில் தன்னை அர்ப்பணித்துக்கொண்டவர் பெருமாள் அவர்கள். அவரது இலக்கியப்பங்களிப்புகளில் முக்கியமானது அவர் ஈழநாடு வாரமலர் ஆசிரியராகவிருந்து வளர்த்து விட்ட எழுத்தாளர்கள்தாம். இன்றும் எழுதிக்கொண்டிருக்கும் எழுத்தாளர்கள் பலரை அவர் அவர்கள்தம் படைப்புகளை ஈழநாடு வாரமலரில் வெளியிட்டு ஆதரித்தார். அவ்வகையில் அவரால் ஊக்குவிக்கப்பட்டு உருவானவர்களில் நானுமொருவன் என்பதை எப்பொழுதுமே நான் நன்றியுடன் நினைவில் வைத்திருப்பேன். இலங்கைத் தமிழ் இலக்கிய உலகில் அவர் பங்களிப்பு முக்கியமானது; எப்பொழுதும் நினைவுகூரப்படும்.

## 32. காவலூர் ஜெகநாதன் பற்றிச் சில வார்த்தைகள்!

எழுத்தாளர் காவலூர் ஜெகநாதனைப்பற்றிய எழுத்தாளர் முருகபூபதியின் 'நினைவில் வாழும் காவலூர் ஜெகநாதன்.' என்னும் பதிவினை நடேசன் (ஆஸ்திரேலியா) அவர்கள் தனது வலைப்பூவில் பதிவிட்டிருந்தார். முகநூலிலும் பகிர்ந்திருந்தார். தமிழகத்தில் காணாமல் போன அவரது நிலை துயரத்துக்குரியது. இனியாவது அவருக்கு என்ன நடந்தது என்பது பற்றி அறிந்தவர்கள் தங்களுக்குத் தெரிந்ததைப்பகிர்ந்துகொள்ள வேண்டும்.

இது பற்றி இணையத்தில் தேடியபோது 'நாடுநடப்பு.காம்' இணையத்தளத்தில் அற்புதன் எழுதும் 'அல்பிரட் துரையப்பா முதல் காமினிவரை' தொடரில் , பகுதி 48இல் பின்வருமாறு குறிப்பிடப்பட்டுள்ளது:

"எழுத்தாளர் எங்கே? போர் நிறுத்தம், பேச்சுவார்த்தையெல்லாம் ஒருபுறம் நடந்துகொண்டிருந்த போது சென்னையில் ஒரு சம்பவம் நடந்தது. இலங்கையிலிருந்து வெளியேறி சென்னையில் தங்கியிருந்தவர் காவலூர் ஜெகநாதன். சிறுகதைகள், நாவல்கள் என்பவற்றை மண்வாசனையோடு எழுதிப் பிரபலமானவர். காவலூர் என்பது யாழ்பாணத்திலுள்ள ஊர்காவத்துறையைக் குறிக்கும். ஜெகநாதனின் சொந்தஊர் அதுதான். சென்னையில் இருந்த காவலூர் ஜெகநாதனை இரவோடு இரவாக சில இளைஞர்கள் அழைத்துப் போனார்கள். அதன்பின்னர் காவலூர் ஜெகநாதன் வீடு திரும்பவில்லை. அவரது நண்பர்களும் உறவினர்களும் சென்னையில் உள்ள இயக்க அலுவலகங்கள் தோறும் விசாரித்துப் பார்த்தார்கள். பயனில்லை. நான்கு இயக்கக் கூட்டமைபுக் கூட்டத்தில் காவலூர் ஜெயகாந்தனை பற்றிப்பேச்சு எழுந்தது."

காவலூர் ஜெகநாதன் இலங்கைத்தமிழர்களின் ஆயுதரீதியிலான விடுதலைபோராட்டத்தின் பக்கவிளைவுகளுக்குப் பலியாகிய ஒருவர்.

காவலூர் ஜெகநாதனை நான் ஒருபோதுமே சந்தித்ததில்லை. எண்பதுகளில் இலங்கையில் வெளியான பத்திரிகைகள், சஞ்சிகைகள் பலவற்றில் , தமிழகத்துச் சஞ்சிகைகள் பலவற்றில் இவரது படைப்புகள் பல வெளிவந்துள்ளன. அதுவும் குறுகிய காலத்தில். இவரை நான் சந்தித்திருக்காவிட்டாலும் ஒருமுறை இவர் என்னுடன் கடிதம் மூலம் தொடர்புகொண்டிருந்தார். எண்பதுகளின் ஆரம்பத்தில். அப்பொழுது இவரது கடிதம் பேராதனை வளாகத்திலிருந்து வந்திருந்ததாக அல்லது அப்பகுதியிலிருந்து வந்ததாக ஞாபகம். அக்காலகட்டத்தில் ஈழநாடு வாரமலரில் எனது சில சிறுகதைகள், கட்டுரைகள், கவிதைகள் சில வெளிவந்திருந்தன. ஈழநாடு மாணவர் மலரில் எனது படைப்புகள் அதற்கு முன்பிருந்தே நான் ஏழாவது வகுப்பில் படித்துக்கொண்டிருந்த காலகட்டத்திலிருந்தே வெளியாகிக்கொண்டிருந்தன. அக்காலகட்டத்தில் ஈழநாடு வாரமலரில் எழுதிக்கொண்டிருந்த இளம் படைப்பாளிகளுடனான நேர்காணல்கள் எழுத்தாளர் காவலூர் ஜெகநாதன் எழுத்தில் ஈழநாடு வாரமலரில்

வெளியாகிக்கொண்டிருந்தன. அந்த வரிசையில் என்னுடனான நேர்காணலொன்றையும் நடாத்துவதற்காக நேரம் கேட்டுக் கடிதமொன்றினை அனுப்பியிருந்தார் எனது மொறட்டுவைப் பல்கலைக்கழக முகவரிக்கு. அப்பொழுது அவ்விதம் சந்திக்கும் சூழல் பரீட்சைகள் காரணமாக எனக்கிருக்கவில்லை. அவரிடம் கேள்விகளை எழுதி அனுப்பும்படி கேட்டிருந்தேன். அவரும் கேள்விகளை அனுப்பியிருந்தார். அவற்றுக்குரிய பதில்களை எழுதி அனுப்பியிருந்தேன். மீண்டும் அவரிடமிருந்து கடிதமொன்று வந்திருந்தது. அதிலவர் என் புகைப்படத்துக்கான 'புளக்'கொன்றினைச் செய்து ஈழநாடு பத்திரிகைக்கு அனுப்பும்படி கூறியிருந்தார். ஆனால் அவ்விதம் செய்து ஈழநாடு பத்திரிகைக்கு அனுப்பவில்லை. அதன் பின் அந்த நேர்காணலும் வெளியாகவில்லையென்று (நானறிந்தவரையில்) அறிகின்றேன். அதன் பிறகு காவலூர் ஜெகநாதனுடன் எனக்கு எந்தவிதத்தொடர்புமிருக்கவில்லை. ஆனால் அவரது மறைவினைப்பின்னர் ஊடகங்கள் வாயிலாக அறிந்து வேதனையுற்றேன்.

இவரைப்போன்ற பலர் அக்காலகட்டத்தில் பல்வேறு தமிழ் அமைப்புகளுக்கிடையிலும் நிலவிய உள்முரண்பாடுகளால காணாமல் போயிருக்கின்றார்கள். இவர்களைப்பற்றிய ஆவணப்படுத்தல்களும் மிகவும் அவசியமானவை.

## 33. நல்லூர் பண்டார மாளிகை வாசலும், வளவும்...

நான் நல்லூர் ராஜதானி நகர அமைப்பு ஆய்வுக் கட்டுரைகளை எழுதியதற்கான் காலகட்டம் 1979-1980. பின்னர் அத்தகவல்களின் அடிப்படையில் தொடராகத் தாயகம் (கனடா) சஞ்சிகையில் எழுதினேன். அத்தொடரே பின்னர் ஸ்நேகா (தமிழகம்) & மங்கை பதிப்பகம் (கனடா) வெளியீடாக வெளியானது. ஆய்வாய்வுக் கட்டுரைகளை முதலில் ஈழநாடு வாரமலரில் எழுதினேன். பின்னர் மொறட்டுவைப்பல்கலைக்கழகக் கட்டடக்கலைச் சரித்திரப் பாடத்துக்காகவும் ஆய்வுக்கட்டுரையாகச் சமர்ப்பித்தேன்.

நான் எழுதியபோது அப்போது எனக்குக் கிடைத்த நில அளவைத்திணைக்கள வரைபடங்களையும் பாவித்திருந்தேன். அண்மையில் கூகுள் மூலம் அப்பகுதியைத் தேடியபோது அப்பகுதியே முழுமையாக மாற்றமடைந்திருந்ததை அவதானிக்க முடிந்தது. குறிப்பாக யாழ் பருத்தித்துறை வீதி நல்லூர் ஆலயத்துக்கருகாக வந்து , முத்திரைச் சந்தை நோக்கித் திரும்பும் பகுதியில் தென்னந்தோப்பொன்றிருந்தது (சங்கிலியன் வீதிக்கும், யாழ் பருத்தித்துறைக்கும் இடைப்பட்ட பகுதியில் மேற்குத்திசையில்) , பருத்தித்துறை வீதியை நோக்கிய அவ்வளவுப் பகுதியில்  பண்டாரமாளிகை என்றொரு  தூணுமிருந்தது. அதற்கண்மையில்  சிறியதொரு முகப்புடன் கூடிய வைரவர் சிலையொன்றுமிருந்தது.

அதில் 'இரண்டாயிரம் ஆண்டு பழமை வாய்ந்த தமிழ் மன்னர் வழி காத்துப் பூஜித்த நல்லை தேரடிப் பதியுரை பண்டார மாளிகை வாசல் ஸ்ரீ பைரவர் ஆலய ஆதிமூலம் உள்ளே' என்னும் வசனங்களும் பொறிக்கப்பட்டிருந்தன.

அதை விபரிக்கும் புகைப்படம் என்னிடமுள்ளது. என் பெட்டிக்கமராவால் அப்போது எடுக்கப்பட்டது. வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த புகைப்படம். கூகுள் வரைபடம் மூலம் பார்த்ததில் இதற்கான அடையாளத்தையே காண முடியாத அளவுக்கு அப்பகுதியே மாறியிருப்பதை அவதானிக்க முடிந்தது.

## 34. 'பழைய சின்னங்கள் சிதைவுறாமல் பாதுகாக்கப்பட வேண்டும்' என்று ஈழநாடு பத்திரிகையில் எழுதினேன்!

அண்மையில் எழுத்தாளர் அருண்மொழிவர்மனின் ”மரபுரிமையைக் காப்பதும் ஓர் அரசியற் செயற்பாடுதான் – பா.அகிலன்” என்னும், கட்டுரையை அவரது 'அருண்மொழிவர்மன் பக்கங்கள்' வலைப்பூவில் வாசிக்க முடிந்தது. அதில் அவர் தற்போது யாழ்ப்பாணப் பல்கலைக்கழகத்தில் கலை வரலாற்று விரிவுரையாளராகப் பணியாற்றும் எழுத்தாளர் பா.அகிலனின் பற்றிக் குறிப்பிடுகையில் பின்வருமாறு குறிப்பிட்டிருந்தார்:

"மரபுரிமைகள் பற்றியும் ஆவணப்படுத்தல் பற்றியும் அக்கறையுடன் செயலாற்றிவரும் அகிலன் மக்கள் மத்தியில் மரபுரிமைகள் பற்றிய விழிப்புணர்வை ஏற்படுத்தும் நோக்குடன் யாழ்ப்பாணத்தில் இருந்த வெளிவருகின்ற உதயன் பத்திரிகையில் எழுதிய கட்டுரைகள் ‘காலத்தின் விளிம்பு’ என்கிற பெயரில் வெளியாகி இருக்கின்றன. ஆவணப்படுத்தல், மரபுரிமைகள், பண்பாடு சார்ந்து அக்கறையுள்ளவர்கள் கட்டாயம் வாசிக்கவேண்டியதொரு தொகுப்பாக ‘காலத்தின் விளிம்பு’ முதன்மை பெறுகின்றது. தற்போது இதே அக்கறையுடன் கூடிய தொடர் பத்தி ஒன்றினை அகிலன் தினக்குரல் பத்திரிகையிலும் எழுதிவருகின்றார்."
பா.அகிலனின் செயற்பாடுகள் பாராட்டுக்குரியவை. அதே சமயம் இவ்வாறான செயற்பாடுகளை அவ்வப்போது பலர் முன்னெடுத்து வந்துள்ளார்கள். வருகின்றார்கள். இவர்களது செயற்பாடுகள்:, இவற்றை ஊக்குவித்த ஊடகங்கள் இவற்றையெல்லாம் பா.அகிலன் ஆவணப்படுத்த வேண்டும். ஏனென்றால் இச்செயற்பாடுகள் பற்றிய வரலாறானது தவறாகப் பதியப்பட்டு விடும் அபாயமுள்ளது.

1981இல் கலாநிதி கா.இந்திரபாலாவை யாழ் பல்கலைகழகத்தில் சந்தித்தபோது அவர் சுவாமி ஞானப்பிரகாசர் நாற்பதுகளில் ஆய்விதழொன்றில் எழுதியிருந்த கோப்பாய்க்கோட்டை பற்றிய கட்டுரையொன்றினைக் காட்டினார். அதிலவர் கோப்பாய்க் கோட்டை இருந்த இடம் எதுவென்பதை அடையாளம் கண்டு (திருமதி வேர்ட்ஸ்வேர்த் என்பவருக்குச் சொந்தமான கோப்பாயிலுள்ள old castle என்னும் பகுதியே அது) அதுபற்றி விபரித்திருந்தார். உடனேயே அப்பகுதியைப் பார்க்கவேண்டுமென்ற ஆர்வமெழுந்தது. கோப்பாய் சென்று பழைய கோட்டையின் (old castle) அன்றிருந்த நிலை பற்றி சிறு கட்டுரையொன்றினை எழுதி வீரகேசரி பத்திரிகைக்கு அனுப்பினேன். அது 'கோப்பாய் பழைய கோட்டையின் கோலம்' என்னும் தலைப்பில் 15.3.1981 அன்று வெளியான வீரகேசரி வாரவெளியீட்டில் வெளியாகியது. சுவாமி ஞானப்பிரகாசரின் காலத்தில் ஒருவருக்குச் சொந்தமாகவிருந்த அக்காணி நான் சென்று பார்த்தபோது பிரிக்கப்பட்டுப் பலருக்குச் சொந்தமாகவிருந்தது. இது போன்ற வரலாற்றுச் சின்னங்களைப்பாதுகாக்க வேண்டுமென்ற சிந்தனை தேசியம் பேசும் நம் அரசியல்வாதிகளுக்கோ அல்லது மாநகரசபை போன்ற அரச

அமைப்புகளுக்கோ இருந்ததில்லை.

இவை தவிர ஈழநாடு வாரமலரில் நல்லூர் இராஜதானியில் அமைந்திருந்த கோட்டை, நல்லூர் இராஜதானி நகர அமைப்பு பற்றி நான் எழுதிய கட்டுரைகள் வெளியாகின.  தமிழரின் வரலாறு பற்றிய சரியான புரிதல் அவசியமென்பதை வலியுறுத்திய கட்டுரைகள் அவை. இவை தவிர ஈழநாடு வாரமலரில் இன்னுமொரு கட்டுரையும் எழுதியிருந்தேன். அது 'தமிழரின் சரித்திரம் கூறும் பழைய சின்னங்கள் சிதைவுறாமல் பாதுகாக்கப்பட வேண்டும். யாழ்ப்பாணம் மாநகரபை முன்மாதிரி காட்டுமா?' என்னும் கட்டுரை. அது 2.11.1980 வெளியான ஈழநாடு வாரமலரில் வெளியானது. அப்பொழுது யாழ்ப்பாண மேயராக இருந்தவர் இராஜா விசுவநாதன் அவர்கள். அக்கட்டுரையில் 'தமிழரின் சரித்திரம் தெளிவாக்கப்பட வேண்டுமானால் தற்போதைய பழமையின் சின்னங்களும் , அழிபாடுகளும் பேணிப்பாதுகாக்கப்பட வேண்டும். இதற்கு யாழ் மாநகரசபை முன்மாதிரி காட்டுமா?" என்று குறிப்பிட்டிருந்தேன்.அதற்கு முக்கியத்துவம் கொடுத்து ஈழநாடு ஆசிரிய பீடத்தினர் கட்டுரையில் கட்டமிட்டுக் குறிப்பிட்டிருந்தனர் (இணைக்கப்பட்டுள்ள படம் பார்க்க) கட்டுரையில் யாழ் சந்தையிலிருந்த 'கங்கா சத்திரம்' பேணப்படுதலின் அவசியம் பற்றிக் குறிப்பிட்டிருந்தேன். கட்டுரை வெளியாகிய பின் அச்சத்திரமும் யாழ் மாநகரசபையினரால் நிர்மூலமாக்கப்பட்டது துரதிருஷ்டமானது.

தமிழர்தம் வரலாறு மற்றும் பழமையின் சின்னங்கள் பற்றி நான் எழுதிய கட்டுரைகள் பற்றிய விபரங்கள் (ஒரு பதிவுக்காக):

1. பதினைந்தாம் நூற்றாண்டில் தமிழ் மன்னர் இராசதானியாக விளங்கிய நல்லூர் கோட்டையும் அதன் அமைப்பு முறையும் - வ.ந.கிரிதரன் (ஈழநாடு வாரமலர் 12.10.1980)
2. பதினைந்தாம் நூற்றாண்டில் நல்லூர் நகர அமைப்பு - வ.ந.கிரிதரன் (ஈழநாடு வாரமலர் 14.12.1980)
3.தமிழரின் சரித்திரம் கூறும் பழைய சின்னங்கள் சிதைவுறாமல் பாதுகாக்கப்பட வேண்டும். யாழ்ப்பாணம் மாநகரபை முன்மாதிரி காட்டுமா? (ஈழநாடு வாரமலர் 2.11.1980)
4. கோப்பாய் பழைய கோட்டையின் கோலம் - வ.ந.கிரிதரன் (வீரகேசரி 15.3.1981)
5. பழமையின் சின்னகள் பேணப்படுதலின் அவசியம்  - வ.ந.கிரிதரன் (நுட்பம், மொறட்டுவைப்பல்கலைக்கழகத்தமிழ்ச் சங்கம் இதழ், 1980/1981)

இவை தவிர சிங்கை நகர் பற்றிய ஆய்வுக்கட்டுரையொன்று பதிவுகள், திண்ணை ஆகிய இணைய இதழ்களில் வெளியாகியுள்ளன. 'நல்லூர் இராஜதானி நகர அமைப்பு' 'தாயகம் (கனடா) சஞ்சிகையில் தொடராக வெளிவந்து ஸ்நேகா (தமிழகம்)/ மங்கை பதிப்பகம் (கனடா) வெளியீடாக வெளியாகியுள்ளது. சிங்கள மொழியிலும் எழுத்தாளர் ஜி.ஜி.சரத் ஆனந்தவினால் மொழிபெயர்க்கப்பட்டு ஆகச மீடியாவேர்க்ஸ் பதிப்பகத்தால் வெளியிடப்பட்டுள்ளது.

சுவாமி ஞானப்பிரகாசர், முதலியார் செ.இராசநாயகம், பேராசிரியர் சிற்றம்பலம்,

முனைவர் பொ.ரகுபதி, பேராசிரியர் புஷ்பகாந்தன் என்று பலர் தமிழர்தம் வரலாற்று பற்றிய தெளிவுக்காகச் செயற்பட்டிருக்கின்றார்கள். கட்டடக்கலைஞர் மயூரநாதன் யாழ்ப்பாணப் பாரம்பரிய வீடுகள் பற்றிய விழிப்புணர்வினை ஏற்படுத்தும் கட்டுரைகளை, புகைப்பட ஆதாரங்களுடன் எழுதியிருக்கின்றார். இவர்களைப்போன்ற பலர் பல்வேறு காலகட்டங்களில் செயற்பட்டிருக்கின்றார்கள். செயற்படுகின்றார்கள். இவர்களின் பங்களிப்புகளையும் ஆவணப்படுத்துவதும் அவசியமானதொன்று.

## 35. கீரிமலைக்கேணி நினைவுகள்.....

நண்பர் பரதன் நவரத்தினம் கீரிமலைக் கேணி பற்றிய படமொன்றுடன் கூடிய முகநூற் பதிவொன்றினை எழுதியுருந்தது என் கீரிமலை பற்றிய கடந்த கால நினைவுகளை மீண்டுமொருமுறை நனவிடை தோய வைத்து விட்டது.

ஒருமுறை என் பால்யகாலத்து நண்பர்கள் கிசோர்குமார். அநபாயனுடன் அங்கு சென்றிருந்தேன். அன்று நான் குளிப்பதற்குரிய தயார் நிலையில் சென்றிருக்கவில்லை. அதனால் கேணியில் குளிப்பதைத் தவிர்க்க முயன்றேன். எதிர்பாராததொரு தருணத்தில் நண்பர்கள் இருவரும் சேர்ந்து என்னைத்தூக்கிக் கேணிக்குள் போட்டு விட்டார்கள். போட்டிருந்த ஆடைகள் நனைந்த நிலையில் அவற்றைக் காயப்போட்டு விட்டு, மாலை வரை அவை காயும் வரை அங்கேயே கேணிக்குள் நீந்தி விளையாடித் திரும்பினோம். மறக்க முடியாத பால்ய காலத்து அனுபவங்களில் அதுவுமொன்று.

நண்பர் கந்தப்பிள்ளை அநபாயன் என் பதின்ம வயதுகளில் முக்கியமான நண்பர். எம்னுடன் யாழ் நகரெங்கும் சைக்கிள்களில் அலைந்து திரிந்தவர்களில் ஒருவர்.

அப்பதிவு பற்றிய என் கருத்தில் "அது சரி.. கீரிமலைக் கேணியில் நீந்தும் பலரும் 'ஒல்லித்தேங்காய்'களின் உதவியுடன் நீந்தப்பழகுவதைப்பார்த்திருக்கின்றேன். ஒல்லிதேங்காய் என்று ஏன் கூறுகின்றார்கள் என்பது பற்றிய விளக்கமேதாவதுண்டா? உள்ளே வெறுமையான தேங்காய்களா? " என்றொரு கேள்வியினையும் எழுப்பியிருந்தேன். அதற்கு நண்பர் சிவா முருகுப்பிள்ளை உடனடியாகவே பதிலொன்றினையும் அளித்திருந்தார். அது வருமாறு:

" சிவா முருகுப்பிள்ளை:  தேங்காய் பகுதி அதிம் இல்லாதது பாரம் குறைவாக இருக்கும்  நன்றாகக் காய்ந்து ஒல்லியாக இருக்கும் பொச்சுப்பகுதி அதிகமாக இருப்பதினால் இலேசாக இருக்கும் மிதப்பதற்கு ஆக்கிமிடிசின் தத்துவப்படி உதவி செய்யும்."

நன்றி நண்பரே உடன் பதிலுக்கு. சிவா முருகுப்பிள்ளை வேறு யாருமல்லர். என் யாழ் இந்துக்கல்லூரி நண்பர்களில் ஒருவரான , இடைக்காட்டைச் சேர்ந்த ஈஸ்வரமூர்த்திதான். எப்பொழுதும் சிரித்த முகத்துடன் காணப்படும் ஆளுமையாளர்.

அநபாயன், ஈஸ்வரமூர்த்தியுடனான நட்பு இன்றும் தொடர்கிறது. இருவரும் தற்போது கனடாவில் வசிக்கின்றார்கள்.

## 36. இலக்கியப் பசிக்குத் தீனி போட்ட யாழ் ஈழநாடு மாணவர்!

என் மாணவப்பருவத்தில் என் எழுத்தார்வத்துக்குத் தீனி போட்ட பத்திரிகைகளில் முதலிடம் யாழ்ப்பாணத்திலிருந்து வெளியான 'ஈழநாடு' பத்திரிகைக்கே. என் மாணவப்பருவத்தில் ஈழநாடு மாணவர் மலர் என் படைப்புகளைப் பிரசுரித்து ஊக்குவித்தது. கவிதைகள், கட்டுரைகள் பல அக்காலத்து ஈழநாடு மாணவர் மலர் பகுதியில் வெளியாகின. என் பதின்ம வயதுகளில் என் சிறுகதைகளை (உருவகக் கதையுட்பட) , கவிதைகளை ஈழநாடு பிரசுரித்து மேலும் ஊக்குவித்தது.

பின்னர் என் பல்கலைக்கழகக் காலகட்டத்திலும் எனது கட்டுரைகள் சிலவற்றை ஈழநாடு பிரசுரித்திருந்தது. இவ்வாறு என் எழுத்துகளை ஈழநாடு பத்திரிகை பிரசுரித்து ஊக்குவித்ததை நான் எப்பொழுதும் நன்றியுடன் நினைவு கூர்வேன்.

## 37. மறக்க முடியாத உதயலிங்கம்!

நண்பர் பரதன் நவரத்தினம் யாழ் இந்துக் கல்லூரி உதைபந்தாட்ட வீரர்கள் குழுவை உள்ளடக்கிய புகைப்படமொன்றினைப் பதிவு செய்திருந்தார். நான் யாழ் இந்துக்கல்லூரியில் இணைவதற்கு முன்னர் சில வருடங்களுக்கு முற்பட்டதாகத்தெரிகின்றது. அக்குழுவிலிருப்பவர்களில் ஒருவர் பழைய நினைவுகளைத்தூண்டி விட்டார். அவர் முன்னாள் சென்றல், யாழ் இந்துக்கல்லூரி அதிபர் சபாலிங்கத்தின் மகனான உதயலிங்கம்.

நான் முதன் முதலாக உதயலிங்கத்தைக் கண்டது 71இல் யாழ் இந்து மைதானத்தில் நடைபெற்ற சென்றல்&யாழ் இந்து 'கிரிக்கட் மாட்ச்'சின்போது. அப்போது அவர் தோற்றத்தில் வளர்ச்சியும் , அழகும் தென்பட்டன. எங்கள் காலத்தில் உதைபந்தாட்டம், துடுப்பெடுத்தாட்டத்தில் சிறந்து விளங்கிய புவிராசசிங்கம் வீட்டு வேலியோரமிருந்த மைதானப்பகுதியில் மாணவர்கள் பலரை ஒன்று திரட்டி சென்றலுக்கெதிராகக் கோசம் எழுப்பத் தலைமை தாங்கிக்கொண்டிருந்தார் உதயலிங்கம். கோசம் எழுப்பியவர்களில் நானும் ஒருவன். எங்களுக்கருகில் சென்றல் கொலிஜ் ரஞ்சித் அல்லது ரஞ்சகுமார் (அப்படியொரு பெயர்தான் நினைவிலிருக்கின்றது) விளையாடிக்கொண்டிருந்தார். பந்து அவர் பக்கம் வரும்போதெல்லாம் நாங்கள் கோசம் எழுப்பி அவரது கவனத்தைத் திசை திருப்ப முயற்சி செய்தோம். வேகப்பந்து வீச்சாளர் நிருத்தானத்தன் பந்து போடும்போதெல்லாம் உற்சாகமூட்டக் கோசங்கள் எழுப்பினோம்.

அந்த மாட்ச் குழம்பிப்போனது. கொட்டடி மணியத்தால் பிட்ச் எரிக்கப்பட்டது. பவிலியனிலிருந்து மாட்ச் பார்த்துக்கொண்டிருந்த சென்றல் அதிபர் சபாலிங்கம் உதயலிங்கம் கோசம் எழுப்பத்தூண்டிக்கொண்டிருந்ததை அவதானித்திருக்க வேண்டும், மாட்ச் குழம்பியதும் , உதயலிங்கத்தைக் கூட்டிக்கொண்டு சென்றார். அவ்விதம் செல்கையில் உதயலிங்கத்தின் கன்னத்தில் அவர் அறைந்தது இன்னும் நினைவிலுள்ளது. அதன் பிறகு உதயலிங்கத்தை நான் கண்டதில்லை. பின்னர் பல வருடங்களுக்குப் பின்னர் புலம்பெயர்ந்த சூழலில் அவர் சைக்கிளில் வெளியே செல்கையில் விபத்துக்குள்ளாகி மரணித்ததாகக் கேள்விப்பட்டேன். உதயலிங்கம் என்றால் அவரது சிரித்த முகம்தான் நினைவில் தோன்றும். இந்தப் படம் பழைய நினைவுகளை நனவிடை தோய வைத்து விட்டது.
பரதன் பகிர்ந்திருந்த புகைப்படத்திலிருந்து உதயலிங்கத்தின் புகைப்படத்தை வெட்டி இங்கு பாவித்துள்ளேன். அதற்காக அவருக்கு என் நன்றி. உதயலிங்கம் உதைப்பந்தாட்ட வீரர் என்பதை இன்றுதான் பரதனின் இப்பதிவின் மூலம் அறிந்தேன்.

## 38. சிரிப்போ! சிரிப்பு!

கலைவாணர் என்.எஸ்.கிருஷ்ணனின் பிறந்த தினம் நவம்பர் 29. நகைச்சுவைப் பாத்திரங்கள் மூலம் நல்ல பல கருத்துகளை அள்ளி அள்ளி வழங்கியிருப்பவர் கலைவாணர் என்.எஸ்.கிருஷ்ணன் / டி.ஏ.மதுரம் தம்பதியினர். கலைவாணர் வெறும் நகைச்சுவை நடிகர் மட்டுமல்லர். நல்ல கருத்துகளைத் தான் பாடிய பாடல்கள் மூலம் வெளிவர மிகவும் பாடுபட்டவரும் கூட.

சிரிப்பு என்றாலே முதலில் நினைவுக்கு வருவது கலைவாணர் / மதுரம் ஜோடியாகப் பாடி நடித்திருந்த 'சிரிப்பு சிரிப்பு' பாடல்தான். கேட்கும் அனைவரையும் பாட்டு முடிவில் அவர்களுடன் சேர்ந்து விழுந்து விழுந்து சிரிக்க வைத்து விடும் சக்தி மிக்க திரைப்படப்பாடல் அது.

கலைவாணரை நினைத்ததும் எனக்கு ஞாபகம் வரும் இன்னுமொரு விடயமும் உண்டு. எனது பால்ய காலத்தில் நான் வவுனியா மகா வித்தியாலயத்தில் படித்துக்கொண்டிருந்த சமயம்... அதிகாலைகளில் குருமண்காட்டிலிருந்து வவுனியா மகா வித்தியாலயத்திற்கு அம்மாவுடன் குழந்தைகள் நாங்கள் ஸ்டேசன் ரோட் வழியாக நடந்து செல்வோம். அவ்விதம் செல்கையில் பச்சைப்பசேலென்ற வயல் வெளியைக் கடந்து செல்ல வேண்டி வரும். ஒவ்வொரு நாளும் நாம் அவ் வயல் வெளியைக் கடக்கும் சமயத்தில் எம்மைத்தாண்டி ஒருவர் மடித்துக் கட்டிய வேட்டியும், சேர்ட் அணியாத வெற்றுடம்புமாக வேப்பங்குச்சியால் பல் விளக்கியபடி செல்வார். பாகவதர் கிராப் வைத்திருப்பவர். அவரை பார்த்தால் அவரது நிறமும், முகமும் என்.எஸ்.கிருஷ்ணனைப் பார்ப்பது போலவே இருக்கும். அவரைப்பார்த்ததுமே நான் அம்மாவிடம் 'இவரைப் பார்த்தால் என்.எஸ்.கிருஷ்ணனைப்போல் இருக்குதம்மா' என்பேன். அம்மாவும் சிரித்தபடி ஆமோதிப்பார்.

ஒரு நாள் வழக்கம் போல் அந்த மனிதர் எம்மைத்தாண்டுகையில் அம்மா அவரிடம் 'இவன் உங்களைப்பார்த்தால் என்.எஸ்.கிருஷ்ணனைப்போல் இருக்கு என்று சொல்லுறான்' என்றார். அவருக்கு அது சந்தோஷத்தைக் கொடுத்திருக்க வேண்டும். மகிழ்ச்சியுடன் தலையை ஆட்டி, என்னை நோக்கியும் மகிழ்ச்சிகரமானதொரு பார்வையை வீசி விட்டுச் சென்றார். அந்த மனிதரும், அவர் காலைகளில் பல் விளக்கியபடி வரும் தோற்றமும் என் நெஞ்சினில் ஆழமாகப் பதிந்து விட்டன. என்.எஸ்.கே.யின் பிறந்தநாளை எண்ணுகையில், அந்த மனிதரின் எண்ணமும் கூடவே தோன்றியது.

## 39. நியூ இந்திரா நெசவுசாலையும் , இளைஞர் டேவிட்டும்!

என் பால்ய பருவத்து வாழ்க்கை குருமண்காட்டுப் பகுதியில் கழிந்தபோது எம் வாழ்வில் எதிர்ப்பட்ட முக்கியமான ஆளுமையாளர்களில் ஒருவர் டேவி. நியூ இந்திரா நெசவு சாலை ஒரு பண்ணை. அங்கு நெசவு சாலை, வயல் இருந்தன. வாடகைக்கு விடுவதற்காகச் சில வீடுகளையும் கட்டியிருந்தார்கள். நெசவு சாலைக்கு அருகில், வீதிப்பக்கமாகப் பெரியதொரு மாளிகையும் இருந்தது. அப்பண்ணைக்குப் பொறுப்பாக இருந்தவர்தான் இளைஞர் டேவிட். இந்திய வம்சாவளியினர்களில் ஒருவர். அப்பண்ணைக்குச் சொந்தக்காரர் சத்தியவாசகம் என்னும் மலையகத்தமிழர். அவரைத் 'துரை' என்பார்கள். அவரது உறவினரே டேவிட் என்றும் கூறுவார்கள். அப்பண்ணையில் வயலுக்குப் பொறுப்பாக இராமசாமி என்னும் மலையகத்தமிழரின் குடும்பமிருந்தது.

டேவிட் எங்கள் குடும்பத்துடன் நன்கு பழகியவர்களிலொருவர். இவர் எம்ஜீஆரின் மிகத்தீவிரமான இரசிகர். எவ்வளவு தீவிரமான இரசிகர் என்றால்... விடுமுறைக்காலங்களில் ஆச்சி அம்மாவின் தங்கயொருவரின் பிள்ளைகளைக் கூட்டிக்கொண்டு வவுனியா வருவார். ஆச்சியின் அன்பும், கலகலப்பும் மிக்க சுபாவம் அனைவரையும் ஈர்த்து விடும் தன்மை மிக்கது. அவ்விதம் வந்த ஆச்சி டேவிட்டையும் கவர்ந்து விட்டார். ஒருமுறை யாழ்ப்பாணம் சென்ற டேவிட் ஆச்சி வீட்டுக்குச் சென்றிருக்கின்றார். அங்கிருந்த அன்பே வா போஸ்டரொன்றைக் கண்டு எடுத்து வந்திருந்தார். மாமா ஒருவர் தியேட்டர் ஒன்றில் மனேஜராக இருந்ததால் ஆச்சி வீட்டில் சினிமா போஸ்டர்கள் நிறைந்திருக்கும். அந்த அன்பே வா போஸ்டரில் எம்ஜிஆர் ஜோல்ஃப் தடியைத் தோளில் வைத்திருக்கும் காட்சியிருக்கும். சுமார் ஆறடி உயரமான அந்த எம்ஜிஆரின் உருவை வெட்டி எடுத்து, அழகான கட் அவுட் செய்த டேவிட் , அந்தக் கட் அவுட்டின் தோள்களில் கைகளைப்போட்டுப் புகைப்படமொன்றும் எடுத்திருந்தார். அவ்வளவுக்கு எம்ஜிஆர் மீதான பற்று மிக்க எம்ஜிஆர் இரசிகர். அந்தப் புகைப்படம் என்னிடம் நீண்ட நாட்கள் இருந்தது. போர்ச்சூழலில் இழந்தவற்றில் அந்தப்புகைப்படமும் ஒன்று.

டேவிட் என்றதும் நினைவுக்கு வரும் இன்னுமொரு விடயம்... எம்ஜிஆர் சுடுபட்ட செய்தி வந்திருந்த நாட்களில் தான் இந்தியா செல்லப்போவதாக அழுதபடி அம்மாளிகையில் ஓரிரு நாட்கள் சோகத்துடன் முடங்கிக் கிடந்தார். பின்னர் எம்ஜிஆர் தப்பி விட்டார் என்றதும் அந்நிலையிலிருந்து மீண்டு வந்தார். அவ்விதம் அவர் முடங்கிக் கிடந்தது எமக்கு இன்னுமொரு விதத்தில் வாய்ப்பாக அமைந்து விட்டது.அவரது சைக்கிளை எடுத்துப் பண்ணையில் ஓடிப்பழகியது அப்போதுதான்.

அந்தப்பண்ணையில் வீதிப்பக்கமாகவிருந்த கூழாம் பழமரத்தையும் மறக்க முடியாது. மரத்திலேறி கூழாம்பழங்கள் பறித்து உண்பதென்றால் பிரியமான ஒன்று.

இப்பண்ணையின் சொந்தக்காரரான சத்தியவாசம் அவ்வப்போது அங்கு வருவதுண்டு. அழகான தோற்றம் மிக்கவர். அவ்விதம் வரும் சமயங்களில் குருமண் காட்டு வீதிவழியாக நடந்து வருவார். அவ்விதமான சமயங்களில் அப்பாவுடன் நின்று கதைத்து விட்டுச் செல்வார்.

இது தவிர இன்னுமொரு விடயத்தையும் நியூ இந்திரா நெசவு நிலையம் நினைவூட்டுகின்றது. நாங்கள் காலையில் பாடசாலை செல்லும்போது நெசவு சாலையில் வேலை செய்வதற்காக அழகான இளம் பெண்கள் வருவார்கள். அவர்களில் ஒருவர் மாநிறமென்றாலும் பார்ப்பவர் எவரையும்  திரும்பிப்பார்க்க வைக்கும் தோற்றம் மிக்கவர். கலகலப்பானவர். கலகலப்பாகத் தன்னுடன் வரும் ஏனைய பெண்களுடன் கதைத்து வருவார். அவர்களைக் காண்கையில் சிரிப்பும், கும்மாளமுமாக இருப்பார்கள். ஒரு நாள் அந்தப்பெண் , நண்பகலில், அவர்களது வீட்டுக்கு முன்னால் விரைந்து வந்த யாழ் தேவியின் முன் பாய்ந்து உயிரை மாய்த்துக்கொண்டார். சிறிது காலம் எம்மையெல்லாம் அதிர்ச்சியில் உறைய வைத்த சம்பவம் அது. அதன் பின்னர் வெகு காலம் இரவுகளில் அந்த நெசவு சாலையில் அந்தப்பெண் வேலை செய்யும் தறி ஒலி கேட்டதாக ஊரவர்கள் சிலர் கூறிக்கொண்டார்கள்.

## 40. குருமன் காட்டுக் கந்தரட்னம் குடும்பம்...

குருமண் காட்டுப்பகுதியில் வசித்த காலத்தில் அதிகம் பழகிய குடும்பங்களில் ஒன்று கந்தரட்னம் குடும்பம். அற்புத நேசன், அற்புத ராஜா, சீமோன் சின்னத்துரை, அற்புத ராணி என்று பெயர்களிருக்கும். இவர்களில் அற்புத நேசன் என் தம்பியின் வயதினை ஒத்தவர். பபா என்றழைப்போம். இவரின் அம்மா மிகுந்த பிரயாசை மிக்கவர். எந்நேரமும் வீட்டுக்குப் பின்னால் இருந்த வயதில் வேலை செய்து கொண்டிருப்பார். வீட்டுக்கு அருகிலேயே எருது கொண்டு வயலுக்குத் தண்ணீர் இறைக்கும் வகையில் வசதி செய்திருந்தார்கள்.

காடு மேடெல்லாம் பபா, தம்பி, மற்றும் அருகில் வசித்து வந்த இன்னுமொரு குடும்பத்தைச் சேர்ந்த அன்ரன், ராசா என்னும் சிறுவர்களுடன் அலைந்து திரிந்த நாட்கள் நினைவில் நிழலாடுகின்றன. அப்பொழுது அங்கு வசித்து வந்த சிற்றம்பலம் என்னும் போலிஸ்காரரும் மறக்க முடியாதவர். சிறுவர்களான எங்களுடன் வந்து அவ்வப்போது விளையாடுவார். பெரிய மீசையுடன் கூடிய அவர் முகம் நினைவுக்கு வருகின்றது. இவரை நினைத்ததும் நினைவுக்கு வரும் இன்னுமொரு முக்கியமான சம்பவம். இவருக்கு ஒரு சகோதரி. அவரும் இவரடன் வசித்து வந்தார். அவர் ஒரு சமயம் இராமாயணத்தை மையமாக வைத்து, நாடகப் பிரதியொன்றினைத் தயாரித்து, சிறுவர்களான எங்களையெல்லாம் நடிக்க வைத்து, கலை நிகழ்வின்றினை அந்திப்பொழுதொன்றில் நடத்தினார். மறக்க முடியாத நிகழ்வு அது. என் வாழ்வில் நான் நடித்த ஒரேயொரு நாடக நிகழ்வு அதுதான்.

பபாவை நினைத்ததும் நினைவுக்கு வரும் இன்னுமொரு விடயம் - இவர்கள் வீட்டு நாய். பெயர் சரியாக நினைவிலில்லை. ஜிம்மி என்றிருக்கலாம். அது வேட்டையாடுவதில் திறமை மிக்கது. குறிப்பாக உடும்பு பிடிப்பதில் அது திறமை மிக்கது. அதனைக்கொண்டு உடும்பு பிடிப்பார்கள்.

பட்டாணிச்சுப் புளியங்குளத்துக்கு இவர், இவருடைய அண்ணன்மார் அனைவரும் சென்று குளிப்போம். குருமண்காட்டுக் காடு மேடெல்லாம் அலைந்து திரிவோம். மறக்க முடியாத அழியாத கோலங்கள் அவை.

## இதுவரை வெளியான நூல்கள்

1. மண்ணின் குரல் (நாவல், கவிதை, கட்டுரைத் தொகுப்பு),
2. எழுக அதி மானுடா! (கவிதைத்தொகுப்பு),
3. அமெரிக்கா (நாவல், சிறுகதைகளின் தொகுப்பு),
4. நல்லூர் ராஜதானி நகர அமைப்பு (ஆய்வு)
5. மண்ணின் குரல் ( நாவல்களின் தொகுப்பு) ,
6. குடிவரவாளன் (நாவல்) ,
7.. அமெரிக்கா (நாவல், திருத்திய இரண்டாவது பதிப்பு.)
8. கட்டடக்கா(கூ)ட்டு முயல்கள் (சிறுகதைத்தொகுப்பு) ,
9> வ.ந.கிரிதரன் கட்டுரைகள் ,
10. ஒரு நகரத்து மனிதனின் புலம்பல் (கவிதைத்தொகுப்பு) ,
11. நவீன விக்கிரமாதித்தன் (நாவல்)

நல்லூர் ராஜதானி நகர அமைப்பு ஆய்வு நூல் மற்றும் இவரது சிறுகதைகள் சிங்கள மொழிக்கு எழுத்தாளர் ஜி.ஜி.சரத் ஆனந்தவினால் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. இவரது படைப்புகள் பல அமேசன் - கிண்டில் தளத்தில் மின்னூல்களாகக் கிடைக்கின்றன.

கணையாழி (1995 - 2000 தொகுப்பு, ஞானம் சஞ்சிகையின் ' ஈழத்துப்புலம்பெயர் இலக்கியத்தொகுப்பு', ' பனியும் பனையும்' தொகுப்பு , அமரர் வெங்கட் சாமிநாதன் பற்றிய வாதங்களும், விவாதங்களும் தொகுப்பு ,'வடக்கு வாசல் 'சஞ்சிகையின் இலக்கிய மலர், ஆழி பப்ளிஷர்ஸ் வெளியிட்ட ஆண்டு 'தமிழ்க்கொடி' மலர் ஆகியவற்றில் இவரது படைப்புகள் இடம் பெற்றுள்ளன. எழுத்தாளர் சுஜாதா அறக்கட்டளையும் ஆழி பப்ளிஷர்ஸும் இணைந்து நடத்திய அமரர் சுஜாதா அறிவியல் புனைகதைப் போட்டியில் வட அமெரிக்காவுக்கான விருதினைப் பெற்ற அறிவியற் சிறுகதை 'நான் அவனில்லை'. இச்சிறுகதை ஆழி பதிப்பகம் வெளியிட்ட ‘சுஜாதா நினைவுப் புனைவு 2009’ , அறிவியற் புனைகதைத்தொகுப்பிலும் இடம் பெற்றுள்ளது. விகடனின் பவளவிழா ஆண்டில் இவரது 'பல்லிக்கூடம்' முத்திரைக் கதையாக வெளியானது.

## வெளியான அமேசன் - கிண்டில் மின்னூல்கள். இவை பதிவுகள்.காம் வெளியீடுகள்.

1. வ.ந.கிரிதரன் பாடல்கள்
2. வ.ந.கிரிதரனின் அணிந்துரைகள்
3. அமெரிக்கா!: அமெரிக்கத் தடுப்பு முகாம் அனுபவம்!
4. வ.ந.கிரிதரனின் கட்டுரைகள் (தொகுதி ஒன்று)
5. வ.ந.கிரிதரனின் 'கணையாழி'க் கட்டுரைகள்
6. ஒரு நகரத்து மனிதனின் புலம்பல்!: வ.ந.கிரிதரனின் தமிழ்க் கவிதைத் தொகுப்பு!
7. அருச்சுனனின் தேடலும் அகலிகையின் காதலும் (நாவல்)
8. அண்டவெளி ஆய்வுக்கு அடிகோலும் தத்துவங்கள்: வ.ந.கிரிதரனின் அறிவியற் கட்டுரைகள், சிறுகதைகள்
9. நவீன கட்டடக்கலைச் சிந்தனைகள்!
10.வன்னி மண்: - என் பால்யத்தின் பிரதிபலிப்பு. (நாவல்)
11. பால்ய காலத்துச் சிநேகிதி! (நாவல்)
12. நல்லூர் ராஜதானி நகர அமைப்பு (திருத்திய இரண்டாம் பதிப்பு)
13.குடிவரவாளன்: நியூயோர்க் மாநகரத் தமிழ் அகதி அனுபவம்! (நாவல்)
14. மண்ணின் குரல்: - கனடாவில் வெளியான முதலாவது தமிழ் நாவல். - (நாவல்)
15. கணங்களும் குணங்களும் (நாவல்)
16. வ.ந.கிரிதரனின் கட்டுரைகள் (தொகுதி இரண்டு)
17. இன்று புதிதாய்ப் பிறந்தேன் (வ.ந.கிரிதரன் பாடல்கள் தொகுப்பு 2

## ஆங்கில நூல்கள் (மின்னூல்களாக) - மொழிபெயர்த்தவர் - லதா ராமகிருஷ்ணன்.

1. An Immigrant (Novel)
2. America (Novel)
3. Nallur Rajadhani City Layout

## வ.ந.கிரிதரன்



தற்போது கனடாவில் வாழ்ந்து வரும் எழுத்தாளர் வ.ந.கிரிதரன் இலங்கையைச் சேர்ந்த தமிழ் எழுத்தாளர். வவுனியா மகாவித்தியாலயம், யாழ் இந்துக்கல்லூரி ஆகிய பாடசாலைகளில் கல்வி கற்ற இவர் , மொறட்டுவைப் பல்கலைக்கழகத்தின் கட்டடக்கலைப் பட்டதாரி. "டொராண்டோ' சென்டனியல் கல்லூரியில் இலத்திரனியற் பொறியியல் துறையில் பட்டம் , தகவற் தொழில் நுட்பம் நுட்பத்துறையில் பல்வேறு கல்வித் தகைமைகளைப் பெற்றவர். இலங்கையிலிருந்த காலத்தில் தன் எழுத்துலக வாழ்வினை ஆரம்பித்த புகலிடத்தில் தொடர்ந்து எழுதி வருகின்றார். பதிவுகள் என்னும் இணைய இதழினை 2000 ஆம் ஆண்டிலிருந்து ஆசிரியராகவிருந்து நடாத்தி வருகின்றார்.

இவரது படைப்புகள் இலங்கை, தமிழகம் மற்றும் புகலிடத்தமிழர்கள் வெளியிட்ட சஞ்சிகைகள், பத்திரிகைகளில் வெளியாகியுள்ளன. தமிழக ஆய்வரங்குகளில் இவரது புகலிடப்புனைகதைகளைப் பற்றிய ஆய்வுக்கட்டுரைகள் சமர்ப்பிக்கப்பட்டுள்ளன. தமிழகப்பல்கலைக்கழகங்களில் இவரது படைப்புகளைப்பற்றி முனைவர் மற்றும், முதுகலைத் தத்துவம் கற்கை நெறிகளுக்காக மாணவர்கள் ஆய்வுகள் செய்திருக்கின்றார்கள். 'பொந்துப்பறவை'கள் என்னும் சிறுகதை சிங்கப்பூர் கல்வி அமைச்சினால் தமிழ் மாணவர்களுக்கான பாடத்திட்டமொன்றில் உள்ளடக்கப்பட்டுள்ளதும் குறிப்பிடத்தக்கது. 'அமெரிக்கா' அமெரிக்கன் கல்லூரியின் (தமிழ்நாடு) பாடத்திட்டத்திலுள்ளது.

ஆனந்த விகடனின் பவள விழாப்போட்டி, எழுத்தாளர் சுஜாதா அறக்கட்டளை மற்றும் ஆழி பப்ளிஷர்ஸ் இணைந்து நடாத்திய உலக அளவிலான அறிவியற் சிறுகதைப்போட்டி ஆகியவற்றில் பரிசுகளைப்பெற்றுள்ளன. கனடாத் தமிழ் இலக்கியத் தோட்டத்தின் இலக்கியச் சாதனைக்கான இயல் விருது 2022 பெற்றவர்.